# யுகஸந்தி

ஸ்ரீமத் பகவத் கீதையில்

அர்ஜுனன் மனநிலைமை



(முதல் பாகம்.)



ஸ்ரீ. ஸ்ரீ. அ

எழுதியது.





புதுச்சேரி.

சகம் ௧௮௪௨.

விலை அணா ௪.

# அட்டவணை.

# நூன்முகம்

---

யுக ஸந்தி உலகத்தில் இப்பொழுது வந்துவிட்டது மனித வாழ்க்கையில் எங்கு பார்த்தாலும் பெருத்த மாறுதல்கள் ஏற்படும். அதுவும் பாரத தேசத்தில் இந்த யுக ஸந்தி வெகு அசாதாரண ஒளியோடு விளங்கும். ஏனெனில் இம்முறை பாரத தேசம் தலை எடுத்ததும் உலகத்திற்கோர் பெரும் நன்கொடை அளிக்கப்போகிறது. இது பரியந்தம் அன்னமே ஆத்மா என்று விஷயாந்தரங்களில் உழன்று கிடந்த உலகம் இப்பொழுதுதான் புனர்ஜன்மம் அடையப்போகிறது இப்புனர்ஜன்மத்திற்கு மந்திரகுருவாக நிற்கக்கூடியதேசம் பாரத தேசம் தான். ஆத்ம விஷயங்களை உலகத்திற்கு எடுத்து உபதேசிக்க மற்றநாடுகளை எல்லாம்விட பாரத நாட்டுக்குத்தான் அசாதாரண தகுதி இருக்கிறதென்பது சொல்லாமலே விளங்கும். அந்தராத்மா சேர்பட்டாலொழிய வெளி விஷயங்கள் சேர்படா என்னும் பேருண்மையை உலகத்திற்கு அளிக்க இப்பரம தபஸ்வினியாகிய பாரததேவியை விட்டால் வேறு யாரால் கூடும்? இவள் ஆதிகாலம் தொட்டு உலகத்தார் தன்னை எவ்வளவு ஏளனம் செய்தாலும் அந்தராத்மாவின் வைபவத்திலேயே மூழ்கி வெளிப்பொருள்களை எல்லாம் அடியோடு புறக்கணித்து விட்டு இருக்கிறாள். இன்றைக்கும் இக்கொள்கைக்காக இவள் படும் துன்பங்களுக்குக் கணக்கே இல்லை. பரம ஆஸ்திகையான ஒரு தாயிக்குத் தன் புதல்வர்கள் தம் முன்னோர்களின் மேன்மையை தூஷித்துக்கொண்டு கெட்ட நாஸ்திகர்களாகத் திரிகிறார்களென்றால் அவள் வயிறு எப்படி கொதிக்காமலிருக்கும்! இப்பெருந்துயர் தன்னை நலிக்கும்போது வெகு பொறுமையாய்ப் பல்லைக் கடித்துக்கொண்டு உயிர்தரித்து இந்த யுகஸந்தி

யில் உலகத்திற்குச்சாந்தியைக்கொடுக்கும் மகான்களான அநேக புத்திரர்களை அவள் பெறப்போகிறாள். ஆகையால் தான் பாரத தேசத்தில் ஜனங்களின் மனதில் நடைபெறப்போகும் மாற்றம் அசாதாரணமாயிருக்கும்.

பாரத தேசத்தில் யுகஸந்தி வந்துவிட்டது. இங்கு தரும தேவதை இனி தன் உருவத்தை மாற்றிக்கொள்ளப் போகிறாள். பாரதவாஸிகள் மனதில் இப்பொழுது பதிந்து கிடக்கும் அவள் உருவம் சுலபத்தில் மாறிவிடாது. சென்ற யுகாரம்பத்தில் பாரத தேசத்து மேதாவிகள் அவள் இப்பொழுது கொண்டுள்ள ரூபத்தையே விடாது தியானித்து, தம்முள் அது வேரூன்றினதும் அதை மற்றவர்களுக்கு உபதேசித்து வந்தார்கள். சான்றோர்களால் அனுஷ்டிக்கப்பட்டும் போதிக்கப்பட்டும் நிலைநாட்டப் பெற்ற தர்மவழிகள் கால அளவில் பாரதவாசி ஒவ்வொருவனாலும் தழுவப்பட்டு அவன் செயல்களை எல்லாம் பரிபக்குவப் படுத்துகின்றன. பாரத தேசத்தார் எல்லாரும் குழந்தைப் பருவ முதல் கடைசிவரையில் உண்பதிலும் உடுப்பதிலும் உறங்குவதிலும் விழிப்பதிலும் கூட தம் செய்கைகள் இத்தரும வழிகளைச் சார்ந்திருக்கவேண்டும் என்று ஒரே கருத்தாய் இருக்கிறார்கள். பிறந்தது முதல் சாகும் பரியந்தம் அவர்கள் விடும் சுவாசம்கூட தரும சிந்தையில் தோய்ந்து கிடக்கிறதென்றால் அத்தேவதையின் உருவம் இந்நாட்டில் எவ்வளவு பலமாக வேரூன்றி நிற்கிறது என்பதைச் சொல்லவும் வேண்டுமோ?

புதிய யுகம் பிறக்கப்போகிறது, தருமதேவதை புதிய ஆடையாபரணங்கள் அணியப்போகிறாள். இதில் வியக்கக் கூடியது ஒன்றுமில்லையே? என்றாலும் மனித இருதயத்தில் அவளுடைய புதிய உருவம் நிலைபெற எவ்வளவு புரட்சிகள் ஆகவேண்டியிருக்கிறது! பாரதவாசி ஒருவன் ஒரு எண்ணத்தை உண்மை என்று ஏற்றுக்கொண்டு விடுவானாகில் அது அவனுடைய உடலில் ஒவ்வொரு மயிர்க்காலிலும் புகுந்துகொண்டு

அவனுடைய ஒவ்வொரு சிறு செயல்களிலும் கூடப் பிரகாசிக்கும். இப்படி அவனுடைய ரக்தபிந்துக்களில் தோய்ந்து கிடக்கும் ஒரு எண்ணத்தை எடுத்துவிட்டு வேறொன்றைப் புகுத்துவதென்றால் அது சுலபத்தில் முடிவதன்று. அவனுக்கு அது ஒரு மறுபிறப்புப் போலாகின்றது.

ஆனால் எவ்வளவுதான் அது கஷ்டமானதாக விருந்தாலும் பாரதநாட்டு மேதாவிகளுக்குப் புது தர்மம் ஒன்று புலப்பட்டு விட்டால் அதை எவ்விதத்திலும மனிதஜாதியின் ஒழுக்கத்தில் கொண்டுவராது விடார்கள். புலி கரடிகள் வாழும் காடுகளிலும் மலைகளிலும் வனாந்தரங்களிலும்சென்று காற்றிலும் மழையிலும் பனியிலும் வெயிலிலும் அடிப்பட்டுக் கொண்டாவது அப்புது தர்மங்களைத் தமக்குள்ளே நிலைநாட்டிக் கொள்வார்கள், பிறகு அவைகளை மனித சமூகத்துக்கு நன்கொடையாக அளித்து அதன் ஒழுக்கத்தில் சேர்த்து விடுவார்கள். பூர்வகாலத்தில் எத்தனையோ மகரிஷிகள் இப்படிக் கொடுந்தவம் புரிந்து நமக்குப் பெரும் பயன்களைத் தந்திருக்கிறார்கள் என்பதற்குச் சான்று வேறொன்றும் வேண்டாம்; பாரத நாட்டிலுள்ள ஒவ்வொரு ஹிந்துவும்—அவன் எவ்வளவு தாழ்ந்த குலத்தவனானாலும்—தான் ஒரு ரிஷிபுத்திரன் என்று சொல்லிக்கொண்டு அந்த ரிஷியின் கோத்திரத்தைத் தான் சேர்ந்தவனாகக் கருதுகிறான். இப்பேர்ப்பட்ட முற்கால ரிஷிகளைப்போன்றவர்களை இப்பொழுதும் நம் பாரத மாதா தன் கர்பத்தில் வைத்திருக்கிறாள் என்பதற்குத் தற்காலத்தில் இங்கு நடைபெறும் இயக்கங்களே போதுமான குறிகளாகும்.

இதற்காக தேசத்தில் நடக்கும் குழப்பமும் கலகமும் சண்டை சச்சரவுகளும் மிகப் பெரிதாகும். பெரிய பெரிய சமூகங்களிலும் சிறு சிறு குடும்பங்களிலும் கூட இதுவரையில் நிலைபெற்றுள்ள வரம்புகள் அழிந்து புதிய புதிய ஆழமான பிளவுகள் தோன்றும். அண்ணன் தம்பி தகப்பன் பிள்ளை,

மாமன் மருமகன் முதலிய சம்பந்தங்களுக்குள்ள மட்டு மரியாதைகளெல்லாம் பறந்துபோய்விடும். எங்கு பார்த்தாலும் மனக் குழப்பம், எங்கு பார்த்தாலும் வாக்குவாதம், எங்கு பார்த்தாலும் சுடுசொற்கள்! இந்த நிலைமை வரவர முதிர்ந்து முடிவில் ஒரு பெரும் போராகிவிடும். பிறகு தான் புது தர்மம் நிலைபெறும்!

இவ்வளவு துன்பங்களை ஏற்றுக்கொண்டாவது புது தர்மங்களை நிலைநிறுத்துவதில் என்ன பயன்? என்று சிலர் நினைக்கக் கூடும். கர்பாவஸ்தைப் பட்டாவது குழந்தைகளைப் பெறுவானேன்? என்று ஸ்திரீகளைக்கேட்டால் என்ன விடையளிப்பார்களோ, தெரியாது. பாரத நாட்டு ஸ்திரீ எவளும் இதைப்பற்றி யோசித்தில்லாம லிருக்கலாம், ஆனால் எந்த பாரத ஸ்திரீயும் கர்பத்துயரை ஒரு பொருளாகக்கருதி குழந்தைபெறும் பாக்கியத்தை இழக்க ஒப்புக்கொள்ள மாட்டாள். இதேமாதிரி ஒரு ஜாதியார் உயிர்த்திருக்க வேண்டுமானால் அடிக்கடி புது தர்மங்களின் பொருட்டு இந்த கர்பாவஸ்தையைப் பட்டுத்தான் தீர வேண்டும். பாரத ஜாதியாரோடு சகாக்களாக சில காலம் வாழ்ந்த மிஸ்ரதேசத்தார், கால்டேயர், அஸ்ஸிரியர் முதலானவர்கள் இத் துன்பத்தை ஏற்றுக்கொள்ளப் பின்வாங்கினதனால் தான் தாம் இருந்த இடம் கூடத்தெரியாமல் மறைந்து விட்டார்கள். பாரத தேசத்தார் காலகதியை அறிந்துகொண்டு தம்முடைய பூர்வாசாரங்களிலுள்ள பசுருகளைப் போக்கிவிட்டு சத்துள்ளவைகளோடு நவீன ஒழுக்கங்களைப் பொருத்தி உயிர் வாழ்ந்து வருகிறார்கள். இருந்தாலும் அவர்கள் யுகஸந்திகளில் படும் துன்பம் மிகக் கொடியதாகவே இருக்கிறது.

சென்ற யுகமுடிவில் மகாபாரத யுத்தத்தில் இக்கொடிய துன்பத்தை பாரதநாடு அனுபவித்திருக்கிறது. ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவின் பேரருளால் அப்பொழுது இந்நாடு அடைந்த பேருதவி சொல்லி முடியாது. மகாபாரதமாகிய பெருங்கடலை ஆதியோடந்தமாய்ப் பரிசோதிக்கமுடியுமானால் அவர் செய்த

உதவி அப்போது ஒருவாறு விளங்கலாம். அப்படி மகாபாரதத்தை முற்றும் ஆராயச் சக்தியற்றவர்கள் யுகஸந்தியின் சுபாவத்தை அறிந்துகொள்ளும் பொருட்டு ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மா தயிரைக்கடைந்து வெண்ணெய் திரட்டுவதுபோல, மகாபாரதத்தைக் கடைந்து ஸ்ரீமத் பகவத்கீதையைச் சொல்லியிருக்கிறார். அதில் துவாபரயுகத்தின் பேரெண்ணங்களுக்கெல்லாம் உறைவிடமாயிருந்துகொண்டு ஸஞ்சன. தர்மகோப்தாவாகிய தன்னிடத்தில் குலைவிலாத அன்பும் பக்தியுமுடைய அர்ஜுனனுக்கு ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா யுகஸந்தியின் நுட்பத்தை எடுத்துக் காட்டுகிறார். இங்கு நம்மால் இயன்றவரை அதைச் சொற்சித்திரங்கள் * மூலமாக விளக்க முயல்கிறோம்.



* Pen-Pictures.

# யுகஸந்தி.

## வரலாறு.

க

மாலைப்பொழுது, சூரியன் வானத்தில் சாய ஆரம்பித்து விட்டான். குருக்ஷேத்திரத்தில் சமவெளி விரிந்து கிடந்தது. ஸ்தானேஸ்வரம் அல்லது தானேஸ்வர் என்றும் பாணிபட் என்றும் தற்பொழுது சொல்லப்படுகிற அக்குருக்ஷேத்திர புண்ணிய பூமியானது அன்று மாலைப்பொழுதில் வெகு ஆரவாரத்துடன் விளங்கிற்று. விசாலமான மைதானத்தில் கூடாரங்கள் செறிந்து கிடந்தன. ஆங்காங்கு இடைவெளிகள் விட்டு பங்குதி பங்குதியாக வகுக்கப்பட்டுள்ள கூடாரங்களின் வெண் சீலைத் திரைகள் காற்றினால் மோதப்படும் பொழுது ஆகாயத்தில் இருந்து நோக்குபவர்களுக்குத் திருப்பாற்கடலின் அலைகளைப் போல அவை பொங்கிப் பொங்கி அமிழ்ந்தன. இப் பெரும் பாசறையைச்சுற்றி ஆகாயத்தை அளாவிய தேர்களும், மலையை நிகர்த்த யானைகளும், வாயுவை வென்ற புரவிகளும் அடர்ந்து நின்றன. போர் வீரர்கள் ஆயுதபாணிகளாக அங்கும் இங்கும் போவதும் வருவதுமாக இருந்தார்கள். ஒவ்வொரு போர் வீரனும் மறுநாள் நடக்கப்போகும் பெரும் போரில் அவனவன் காட்டப்போகும் வீரியத்தைக் குறித்து வெகு உல்லாசமாகப் பேசிக்கொண்டிருந்தான்; அங்கு கூடியிருக்கும் பதினெட்டு அக்ஷௌஹிணி கணக்குள்ள சேனைக் கடலில் தான் ஒரு சிறு துளியே ஒழிய வேறில்லை என்பதை எவனும் நினைக்கவில்லை.

தசை எலும்பு ரத்தங்களால் ஆக்கப்பட்ட இரண்டு கடல்கள் தலைவன் ஒருவனால் தூண்டப்பட்டு ஒன்றோடொன்று மோதுமாகில் அதைப்போலத்தான் இருக்கின்றது தற்காலப் போர். ஒரு க்ஷணத்தில் போராட்கள் மலை மலையாகப் பிணமாய்க் குவிந்து விடுகிறார்கள். தனிப்போராள் ஒருவன் என்ன பராக்கிரமசாலியாக இருந்தாலும் பயன் படுவதில்லை. நாம் சொல்லுகின்ற பாரத யுத்தத்தில் வேறு முறைகள் அனுசரிக்கப்பட்டு வந்தன. அக்காலத்தில் ஏற்பட்டிருந்த அஸ்திர சஸ்திரங்களும் பாணங்களும் இப்பொழுது வழக்கத்திலிருக்கும் போர்க் கருவிகளைப்போல வெகு சுலபமாக கற்கக் கூடியவை அல்ல. கைதேர்ந்த பராக்கிரமசாலிகள் தான் அவைகளைச் சரிவர உபயோகப்படுத்தக்கூடும். ஒவ்வொருவனும் சிறுவயதில் இருந்து ஆயுதப் பயிற்சி பெற்றவனானதால் குறித்த ஒரு எதிரியோடு போர்செய்து தன் சௌரியத்தை எல்லாம் விளங்கச்செய்வான். அதில் ஒவ்வொருவனுக்கும் தன் புத்தி சாதுர்யத்தைக் காட்ட இடமிருந்தது. ஆகையால் தான் குருக்ஷேத்திரத்தில் ஒவ்வொருவனும் தான் மறுநாள் செய்யப்போகும் வீரச் செயல்களைப் பற்றி ஓயாது பேசிவந்தான்.

குருக்ஷேத்திர மைதானத்தின் மற்றொருபகுதியில் சேனைத் தலைவர்களுக்கென்றும் துணை அரசர்களுக்கென்றும் சிற்றரசர்களுக்கென்றும் அமைக்கப்பட்டிருந்த தனித்தனி கூடாரங்களிலும் கூட மறுநாள் நடக்கப்போகும் போரைக் குறித்துத்தான் பேச்சு நடந்துவந்தது. குதிரைவீரர், யானைவீரர், அதிரதர், மகாரதர் என்னும் பெரிய ராணுவப்பட்டங்களைத் தரித்த வீர சிகாமணிகள் தாம் மறுநாள் செய்யப்போகும் போரில் தம்முடைய எதிரிகளைத் தெரிந்து எடுப்பதிலும், அவர்களைத் தாக்கும்பொழுதும் தம்மைக் காக்கும்பொழுதும் எந்த எந்த படைகளை உபயோகப்படுத்துவது என்பதை யோசிப்பதிலும் காலம் கழித்துவந்தார்கள்.

துரியோதனன் சேனைக்கு குரு சிரேஷ்டரான பீஷ்மர் தலைமை வகித்தார். துரோணர், கிருபர், கர்ணன், அசுவத்தாமா முதலியவர்கள் தத்தம் சேனைகளோடு அவருடைய ஆக்கினைப் பிரகாரம் போர் புரியத் தயாராகி நின்றார்கள். அதுபோலவே பாண்டவர் பக்ஷத்திலும் சேனைத்தலைவர் யுதிஷ்டிர மகாராஜா வாக இருந்தாலும் போர்க்களத்தில் நடக்கவேண்டிய ஏற்பாடு களை எல்லாம் பீமசேனனும் குடாகேசனான அர்ச்சுனனும் செய்து வந்தார்கள். அன்று காலையில் இருந்து மாலை பரியந்தம் அர்ச்சுனனுக்குச் சிறிது நேரமும் ஓய்வு கிடையாது. தன் பக்ஷத்து சேனா வியூகங்களை குறித்த இடங்களில் அமரச்செய்து, போர் நடக்கும்போது பீமசேனன் கருத்துக்கு இசைந்தே எல் லாரும் நடக்க வேண்டும் என்று திட்டம் செய்துவந்தான். இப் பெரும் சேனைக்கு வேளாவேளைக்கு அன்னபானாதிகளைத் தக்கபடி அளிப்பதற்கு தென்னாட்டு அரசர்களில் முக்கியனான உதியஞ்சேரல் என்னும் சோநாட்டுத் தமிழரசன் ஒப்புக் கொண்டு இருந்தபடியால் அவனும் தன் படையாட்களுடன் அங்கு வந்து இருந்தான். யுத்தத்தில் புறங்காட்டுவது என் பதையே அறியாத தமிழர்களின் திறமையை நன்குணர்ந்த அர்ச்சுனன் உதியஞ்சேரலையும் முன் அணியில் நின்று எதிரி களின் முன்னேற்றத்தைத் தடுக்கும்படி திட்டம் செய்தான். பிறகு யானையாட்கள், குதிரையாட்கள், காலாட்கள், ரதம் செலுத்துவோராகிய எல்லோருக்கும் வேண்டிய ஏற்பாடுகளை சரிவரச்செய்து முடித்துத் தனக்காக ஏற்பட்டிருக்கும் மத்திய அணியில் மாலைப்பொழுதில் அவன் வந்துசேர்ந்தான். அங்கு தான் கண்காணிக்கவேண்டியதை ஆதியோடந்தமாய் கவனித்து விட்டு குருக்ஷேத்திரத்தின் ஒருகோடியில் தனியாகப் போய் விடாய் ஆற்றிவர ஸ்ரீ கிருஷ்ணனுடன் அர்ச்சுனன் புறப்பட் டான்.

உ

சேனைக்கடல் அனைத்தையும் கடந்து மேற்குத் திசையில் மேட்டு நிலமான ஒரு தனி இடத்தில் இவ்விருவரும் வந்து சேர்ந்தார்கள். மரம் செடிகள் அங்கு அதிகமாக இருக்கவில்லை, சுற்றிலும் செவ்வானம் பரந்து கிடந்தது. வானத்தில் ஆங்காங்கு துண்டு துண்டாக மிதந்த சிறு மேகங்கள் மெல்ல அசையும்போது அவைகளின்மீது படிந்த செந்நிறம் வெகு கோர எண்ணங்களை மனதில் உதிக்கச்செய்தன. சாதாரணமாக மேகங்கள் ஆகாயத்தில் மிதந்து செல்லும்போது அவைகள் எடுத்துக்கொள்ளும் உருவங்களுக்குக் கணக்கே இல்லை; ஒருவன் அவைகளை உன்னிப்பாய் நோக்கிவந்தால் அவனுடைய எண்ணத்திற்கு ஏற்றவாறு அவைகள் உருவங்களை எடுத்துக் கொண்டு அவன் மனோலோகத்தில் நடைபெறும் விஷயங்களை இப்பிரகிருதி லோகத்தில் நடத்திக் காட்டுவதுபோலத் தோன்றும். அதுவும் குருக்ஷேத்திர வானத்தில் அன்றுமாலை அசாதாரணமான மாறுதல் காணப்பட்டது. காமரூபிகளான மேகக் கூறுகள் மனிதர் தலை, உடலம், கைகால்கள்போல உருகொண்டு கிடந்தன. அவைகள் அடிக்கடி தனித்தனி அவயவங்களாகப் பிரிவதும், மறுபடி ஒன்று கூடுவதுமாக இருந்தன. குதிரைத் தலைகளும், யானைத்தலைகளும், அவைகளின் ஒடிந்து முறிந்த மற்றைய அவயவங்களும் வானத்தில் எங்கும் சிதறிக்கிடந்தன. செவ்வானம் முதிர முதிர இந்த உடலங்கள் எல்லாம் குருதியில் தோய்ந்து கிடப்பனபோலத் தோன்றிற்று. எங்குபார்த்தாலும் ரக்தவெள்ளம்! எங்குபார்த்தாலும் போர் போராக பிணக்குவியல்கள்! ஒடிந்த விற்களும், முறிந்த தேர்களும் யுத்தப்பொறிகளும் சிதறிப்போய் இரத்தப் பிரவாகத்தில் மிதந்து சென்றன. சூரியன் மேற்குச் சமுத்திரத்தில் சாயவே செவ்வானமெல்லாம் உலர்ந்த ரக்தக் கறைபோல் தடித்த நிறம்பெற்றது. இருளும் தொலவில் தன் திறந்த வாயுடன் உலகத்தை விழுங்க வந்து

கொண்டிருந்தது. பரந்தவானத்தில் நடைபெற்ற இந்த கோரக் காக்ஷியை ரணக்களத்தில் குவிந்துநின்ற பதினெட்டு அக்ஷௌஹிணி படையாட்களில் ஒருவனும் கவனிக்கவில்லை. அவனவன் தன் சொந்த பிரதாபத்தில் முழுகிக் கிடந்தானே ஒழிய, தான் மறுநாள் செய்யப்போகும் போரைக்குறித்து மகா பிரகிருதி என்ன எண்ணம் கொண்டிருக்கிருள் என்பதை எவனும் சிந்திக்கவே இல்லை. தனி மேட்டில் மந்தமாருதத்தில் விடாய் ஆற்றிவரும் இருவர்களில் ஒருவன் ஒரு மரத்தடியில் சாய்ந்து கொண்டு இந்த வானவெளியில் நடைபெற்ற மேகங்களின் நுட்பமான சலனங்களை ஒன்று விடாமல் கவனித்து வந்தான். இனி நடக்கப்போகும் யுகஸந்தியின் பிரதிபிம்பத்தை எடுத்துக் காட்டும் மாசற்ற கண்ணுடியைப்போல அவனுக்கு விளங்கிற்று மேல்வானம். யுகஸந்தி இவ்வளவு கொடியது என்பதை நினைக்க நினைக்க அவன் மனம் துடித்தது. அவன் தன் நண்பனோடு எதுவும் பேசாமல் வானத்தையே வெகு கருத்தாய் நோக்கிக் கொண்டு அசைவற்று இருந்தான்.

சற்று தூரத்தில் உட்கார்ந்துகொண்டிருந்த அவன் நண்பன் சிறிது இளைப்பாறினதும் "என்ன கிருஷ்ணு, மரத்தடியில் படுத்துக்கொண்டுவிட்டாய், காலையிலிருந்து ஒடி யாடினதால் நீ வெகு அயர்ந்து விட்டாய்போல் இருக்கிறதே!" என்று மற்றவனைப் பார்த்துச் சொன்னுன்.

ஸ்ரீ கிருஷ்ணன் யாதும் பதில் உரைக்கவில்லை, அவன் வானத்தை நோக்குவதிலேயே உன்னிப்பாக இருந்தான்.

—கிருஷ்ணு, என்னுடன் பேசக்கூடாதா? வானத்தில் என்ன இருக்கிறது, அதைக்கண்டு இப்படி பிரமித்து இருக்கிருய்! இந்த தென்றல்காற்றில் சற்று உல்லாசமாகப் பேசிக் கொண்டிருப்போம் என்று வந்தால் நீ என்ன இப்படி மௌன விரதம் எடுத்துக்கொண்டு விட்டாய்? என் போர்க்களத்தில் இப்பொழுது வகுக்கப்பட்டிருக்கும் நமது அணிகளில் ஏதாவது

தவறு உண்டா? நமது வலது புறத்தில் மகா பராக்கிரமசாலி யான பீமசேனன் நகுல சகாதேவர்களோடும் தன் பெரும் சேனையோடும் சிங்கம்போலக் காத்துக்கொண்டிருக்கிறனே, அதில் ஏதாவது குறை உண்டா? நமது இடதுபுறத்தில் யுதிஷ்டிர மகாராஜாவே தம் பெரும் படையோடு தயாராக நின்று கொண்டு இருக்கிறரே! மத்திய அணியில் எனக்கு உதவிபுரிய சிகண்டி விராடன் முதலானவர்கள் தான் இருக்கிறர்கள் என்றாலும், நீ இருக்கும்போது எனக்கு என்ன குறை? நானும் காண்டீவத்துடன் நிற்கவில்லையா? இந்த ஏற்பாட்டில் என்ன பிசகு இருக்கிறது? சொல்லு பார்ப்போம். உன் முகத்தில் காணும் கவலையைப் பார்த்தால் நாளைக்கு நாம் தோற்று விடுவோமோ என்று நீ அஞ்சுகிறய்போல் இருக்கிறதே?

— அர்ச்சுனு, போர்முகத்தில் நாம் தோல்வி அடைவோம் என்று நான் சிறிதுகூட எண்ணவில்லை. ஜயம் நமக்குத்தான் என்பதில் சிறிதுகூட சந்தேகம் இல்லை. ஆனல் இப்பொழுது என்னபுரட்சி நடக்கவேண்டி இருக்கிறது. இன்று தலை எடுத்து ஓங்கி நிற்பவைகள் நாளைக்கு இருந்த இடம் தெரியாமலே மறைந்து விடப்போகின்றன. இன்றைக்கு மேடாய் நிற்குமவைகளில் அனேகம் ஒன்றுமே இல்லாமல் போய்விடும். யாருக்கும் தெரியாமல் இப்பொழுது தரையில் மறைந்து கிடப்பவைகள் நாளைக்குத் தலை தூக்கிக்கொண்டு உயர்ந்து நிற்கும். இப்படி மேல் கீழாகவும் கீழ் மேலாகவும் மாறுவது உலகத்தின் இயற்கையேயானாலும் இம்முறை நடைபெறப்போகும் மாறுதல் அதிக பயங்கரமாகவே இருக்கிறது!

—நீ ஏது இப்படியோசிக்க ஆரம்பித்துவிட்டாய், கிருஷ்ணு? ஜயம் நமக்குத்தான் என்பதில் சந்தேகம் இல்லை என்று சொல்லுகிறய். ஜயம் நமக்கானல் நடக்கப்போகும் மாறுதல் ஏன் பயங்கரமாக இருக்கவேண்டும்? இன்று தலைமை வகித்திருக்கும் துஷ்டனை துரியோதனன் அழியப்போகிறன், செங்

கோல் நாளைக்கு நாமல்லவோ செலுத்தப் போகிறோம்: இந்தப் புரட்சி தருமமானது தானே! ஏதில் வருத்தத்திற்காவது பயத்திற்காவது இடம் ஏது? திருதிராஷ்டிர புத்திரர்கள் என்ன தர்மிஷ்டர்களா, ஐயோ அவர்கள் தோல்வியடைந்து நாசமாய்ப் போகிறார்களே என்று துக்கப்படுவதற்கு? நாம் தான் என்ன அற்பர்களா, இதுவரையுள்ள தர்மத்தைப் பாதுகாக்காது விட்டு விடுவோமோ என்று பயப்படுவதற்கு? இந்தப் புரட்சிக்கு நீ ஏன் வியாகூலப் படவேண்டும்? இராஜ்யத்தில் பரிபூரண உரிமையுள்ள நமக்கு ஒரு ஊசிமுனை அளவு நிலங்கூடக் கொடுக்கமாட்டேன் என்று சொன்ன கிருபணனுக்காக நீ இப்படி பரிதாபப் படலாமோ? நீ தான் தூதுபோனாயே கிருஷ்ணா, அந்த துரியோதனன் ஏதாவது சமாதானப் பேச்சுக்கு இடங்கொடுத்தானா? அவன் ஒரே பிடிவாதமாய் நம்மை கெடுக்க முயலும்போது நாம் ஏன் அவனை தொலைத்துவிட்டு அரசு ஆளக்கூடாது? இது வரையில் யுத்தத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளை எல்லாம் என்னுடன் கூடவே இருந்து குறைவறச் செய்துவிட்டு சமயம் தெரியாமல் இப்பொழுது நீ வீணாக அஞ்சுகிறாயே, இது உனக்குத் தகுமா?

—அர்ச்சுனா, நீ இப்பொழுது இரு பக்ஷங்களிலும் உள்ள தர்மாதர்மங்களை எடுத்துக் காட்டினது எனக்குச் சந்தோஷம் தான். ஆனால் ஸுயோதனன் அழியப் போகிறான் என்று நான் கவலைப்படவில்லை; சகோதரர்களாகிய நீங்கள் அரசு புரிவதற்கும் நான் தடைசொல்ல வில்லை. இருந்தாலும் இன்று தருமம் என்று கருதப்படுவன எல்லாம் நாளைக்கு அப்படியே நிற்கப் போவதில்லை. இத்தருணத்தில் உண்டாகப் போகும் வேற்றுமைகளை நினைக்க நினைக்கத் தான் எனக்கு மனப்பதட்டமும் வியப்பும் உண்டாகின்றன.

—'கோல் உயரக்குடி உயரும்' என்பது உனக்குத் தெரியாதா கிருஷ்ணா? நாம் அரசு செலுத்துவதில் என்ன விபரீதம் விளைந்துவிடும்? தருமம் ஓங்கி வளருமேயன்றி குன்றிவிடுமோ?

நீயே சொல் பார்ப்போம்? வீண் பயத்தைப்பாராட்டி நீ என் கவலைப்படுகிறாய்? உன் மனதை எப்படிக் கவலை விழுங்கி விட்டதோ, அப்படியே நம்மையும் இருள் விழுங்க வருகிறது. நான் இந்த மேட்டில் இருந்து நம் விரோதிகளின் யுத்த பூமி அமைப்பையும் அவர்கள் வகுத்திருக்கும் அணிகளின் நிலைமையையும் அறியலாம் என்று இருந்தேன். ஒளி குன்றிவிட்டபடியால் அது முடியவில்லை. உன் மனக்கவலையைத் தீர்க்கும்பொருட்டு சற்று நேரம் உல்லாசமாகப் பேசிக்கொண்டு நல்ல காற்றில் உலாவி விட்டு நம் பாசறைக்குப் போவோம் வா.

என்று இப்படி அர்ச்சுனன் பேசிய பேச்சைக் கேட்டு ஸ்ரீகிருஷ்ணன் கலகல வென்று சிரித்து விட்டுச் சொல்லுகிறான்: "என் கவலையை ஒழிக்க நீ முயலுவதைக்காண எனக்கு வெகு சந்தோஷம், அர்ச்சுனா. நாளைக்கோ பெரும்போர் நடக்கப் போகிறது. நீ மகா சூரன் என்பதை நான் சொல்லவேண்டியதில்லை. எதிரிகள் யார் யார் என்பதும் அவர்கள் புஜபல பராக்கிரமங்களும் உனக்குத் தெரிந்த விஷயமே. உங்கள் குடும்பத் தலைவரும் சாஸ்திர வல்லவரும், தனுர்வேதத்தில் கரை கண்டவருமான பீஷ்மர் திருதிராஷ்டிரர்களின் சேனைத் தலைவர். உனக்கு வில் வித்தை கற்றுக்கொடுத்த துரோணரும் கிருபாசாரியரும் தனித்தனி சேனைகளோடு அவருக்கு உதவி புரிந்து நிற்பார்கள். நீயும் மெச்சத்தக்க தயாள குணமுடைய சுத்த வீரனான கர்ணனும், உன் கூடவே சிறு வயதில் இருந்து சொந்த அண்ணன் தம்பிகளைப்போல வளர்ந்து, உன்னுடன் தனுர் வித்தை கற்றுக்கொண்ட ஸுயோதனனும் போர்க் கோலம் பூண்டு ரணக்களத்தில் நிற்பார்கள். தனித்தனியே அசகாய சூரர்களான இவர்கள் எல்லோரும் ஒருங்கேகூடி நிற்கிறார்களானாலும் ஜயம் நம் பக்ஷத்தில்தான் என்பதில் சந்தேகமில்லை. அர்ச்சுனா நீ மாத்திரம் சிறிதும் உற்சாகக் குறைவின்றி போர்செய்யத் தயாராகி இருக்கவேண்டும். அது ஒன்று தான் அவசியம்."

—நல்ல வேடிக்கைதான், கிருஷ்ணா, நான் உனக்கு தைரியம் சொல்லப்போக நீயே என் மேல் திரும்பிவிட்டாயே! இந்த யுத்தத்தில் எனக்கு எதற்காக உற்சாகம் குறையும்? ஆதரவற்ற திரௌபதியையும் என் சகோதரர்களையும் என்னையும் துரியோதனாதியர்கள் அவமானப் படுத்தியது எனக்கு ஞாபகத்தில் இல்லையா? எங்களை நாடு நகரங்களிலிருந்து துரத்தினதுமன்றி, ஒரு வருஷம் திருடர்களைப்போல மறைந்து வாழும்படி செய்தார்களே! அதுவும் எனக்கு மறந்து போயிற்றா? நம் குலத்தொழிலே போர்த்தொழிலாயிற்றே அதோடு இம்மனக்கொதிப்பும் சேர்ந்தால் எனக்கு இப்போரில் உற்சாகம் குறையக் காரணம் உண்டோ? பீஷ்மர், துரோணர் கிருபர், கர்ணன், அசுவத்தாமா முதலானவர்களுடைய புய வலியையும் பராக்கிரமத்தையும் நான் எவ்விதத்திலும் அவமதிப்பதில்லை. ஆனால் கிருஷ்ணா "யதோ தர்ம: ததோ ஜய:" தர்மமுள்ள இடத்தில் ஜயமுண்டு என்னும் ஆன்றோர் வாக்கு பொய்யாகுமா? மேலும் "யதோ கிருஷ்ண: ததோ ஜய:" எங்கு கிருஷ்ணனோ அங்கு ஜயம் என்பது எனக்குக் கைகண்ட பலனாயிற்றே!! உனக்குப் பின் புறத்தில் நானும் ஒரு சிறு வில்லைத் தாங்கி நிற்கிறேன். நீ என் தேரை நடத்துகிறாய், நான் காண்டீவத்தைப் பிடித்து நிற்கிறேன் என்றால் யார் வல்லமை நம்மை என்ன செய்யும்? தருமம் நம் பக்ஷத்திலிருக்க எதிரிகளிடத்தில் படைவலி ஒன்று மாத்திரம் இருந்தால் போதுமா நம்மை வெல்லுவதற்கு? எவ்வளவு வல்லவர்கள் ஒன்று கூடினாலும் அதருமத்தால் தருமத்தை நாசமுறச் செய்ய முடியுமா? திக்கற்ற சீதையை ராவணன் கவர்ந்து கொண்டு போகும்போது "தருமத்தை வெல்லுமோ பாவம்" என்று அவளும் தைரியத்தோடு இருக்கவில்லையா? இதெல்லாம் உனக்குத் தெரியாதா கிருஷ்ணா? ஜயத்தில் இவ்வளவு நம்பிக்கையோடு இருக்கிற நான் உற்சாகம் குறைவேனா! நீ என்னை வீணே பரிகாசம் செய்கிறாய் இருந்தாலும் நீ பெரி

யவன் நான் சிறியவன். என் மனதில் இருந்ததை எல்லாம் உன்னுடன் சொல்லிவிட்டேன். இனி எல்லாம் உன் பாரம்தான்.

ரு

இப்படி அர்ச்சுனன் சொன்னதைக்கேட்டுக்கொண்டிருக்கையிலேயே ஸ்ரீகிருஷ்ணன் மடியில் இருந்து அழகான தன் புள்ளாங்குழலை எடுத்தான். அர்ச்சுனன் அதைக்கேட்டு வெகு நாளாய் இருந்தது. இப்பொழுது ஒருமுறை அதைக் கேட்க வேண்டும் என்ற அவா அவனுக்கு அதிகமாக இருந்தாலும் குழல் ஊதும்படி தானாகக்கேட்டால் ஸ்ரீகிருஷ்ணன் என்ன சொல்லுவானோ என்று சும்மாயிருந்தான். அவனாகவே அதை எடுக்கவே அர்ச்சுனனுக்கு அளவிறந்த சந்தோஷம் உண்டாயிற்று. ஸ்ரீகிருஷ்ணன் குழல் எடுத்தான் என்றால் பிரகிருதி தேவி சலனமற்று நிற்பாள். ஜீவ ஜந்துக்கள் மாத்திரமல்ல உயிரற்ற நதிகளும் காற்றுங்கூட அசைவன்றி நிற்கும்; சூரிய சந்திரர்களும் நிலை பெயரார்கள். ஸ்ரீ கிருஷ்ணன் குழல் ஊதினால் கொடிகளும், செடிகளும், மரங்களும் ஆனந்த சாகரத்தில் மூழ்கிக்கிடக்கும் என்றால் மிருகங்களும், பக்ஷிகளும் அனுபவிக்கும் இன்பத்திற்கு ஒரு எல்லை உண்டோ? அதிலும் மனிதருடைய பேரானந்தத்தை ஆழம் பார்க்கவும் முடியுமோ? இவ்வளவு பெருமை வாய்ந்த குழலை ஸ்ரீ கிருஷ்ணன் வெகு காலமாகத் தொடவே இல்லை. இன்று மாலை அம் மேட்டின் பேரில் ஸ்ரீ கிருஷ்ணன் ஏறும்போது அவன் முகத்தில் காணப்பட்ட பெரும் கவலையை யாராவது கவனித்திருந்தால் அவன் சில நாழிகைக்குள் பேரின்ப வெள்ளத்தைச் சொரியும் குழலை ஊதுவான் என்று கனவிலும் எண்ணியிருக்கமாட்டார்கள். இப்பொழுது ஸ்ரீ கிருஷ்ணன் முகத்தைக் கண்டவர் யாரும் அவன் சற்றே முன்புதான் கவலைக்கடலில் ஆழ்ந்திருந்தான் என்பதை நம்பமாட்டார்கள். இப்படி அரை நிமிஷத்தில் தன்னை அடியோடு மாற்றிக் கொள்ளக்கூடிய இந்த மகாயோகி தன்னையே

மறக்கச்செய்யும் குழலை எடுத்து வாசிக்கலானான். ஸ்ரீ கிருஷ்ணன் தானே இந்த இன்ப வெள்ளத்தில் மூழ்கி இருந்தபடியால் அவன் கண்கள் அரைவாசி மூடி இருந்தன. பிரகிருதிதேவியும் இலேசான இருள் பரவவிட்டு மங்கலான பாதி பார்வையுடன் அக்குழலோசையில் லயப்பட்டு யோகநித்திரையில் இருப்பவள் போலக் காணப்பட்டாள். ஆஹா! அவன் குழலோசையில் என்ன நயம்! என்ன நயம்! இவ்வளவு லஹரிகொடுக்கும் சக்தி வெறும் சப்தத்திற்கு எங்கிருந்து வந்தது! ஸ்ரீ கிருஷ்ணன் குழல் வழியாகக் காற்றை ஊதுகிறானே அல்லது அமிர்தத்தை இடைவிடாது பெருகவைக்கிறானே! அல்லது அவன் குழல் துவாரங்களில் புகுந்து வெளிவரும் காற்று தன் தன்மையை அடியோடு இழந்துவிட்டு சுத்த இன்ப வெள்ளமாக மாறி விடுகிறதோ! இதை யாரைக்கேட்டு அறிந்துகொள்வது! ஸ்ரீ வேணுகோபாலன் குழல் ஊதுகிறான் என்றால் அவனைச்சுற்றி இருப்பவர்களுக்கு குழலாவது அதை வாசிப்பவனாவது, அவர்கள் இருக்கும் உலகமாவது ஒன்றுமே புலப்படாது. அவர்கள் அறியக்கூடியது எல்லாம் இன்பம், இன்பம், இன்பம் என்னும் ஒரே பொருள் தான்! எங்கு பார்த்தாலும் ஆனந்த வெள்ளம் பொங்கி ஓடும். அதைத் தவிர வேறொன்றும் கவனத்திற்கு வாராது. இந்த அற்புதமான வாத்தியத்தைக் கேட்கக் கேட்க அர்ச்சுனனுடைய அந்தராத்மா இன்பக்கடலில் மூழ்கி விட்டது. அவனும் மெய் மறந்து கிடந்தான். இவ்வுலகத்தில் இன்னும் அவன் செய்யவேண்டியது அனேகம் உண்டு என்பது அவன் மனதில் அப்பொழுது உதிக்கவே இல்லை. அவன் உணர்ந்த தெல்லாம் அமிர்த பானம் செய்துகொண்டு வாழும் அமரர்கள் காணும் ஆனந்தக்களி ஒன்று தான். தன்னையே மறந்து இந்தக் களிப்பில் எவ்வளவுகாலம் தோய்ந்து கிடந்தானோ அதுகூட அவனுக்குத் தெரியாது. கடைசியாக ஸ்ரீ கிருஷ்ணன் அவனைத்தட்டி, "பொழுது போய்விட்டது, நம் பாசறைக்குப் போவோம் வா," என்று சொன்ன சப்தம் அவனை அந்த ஆனந்த லஹரியிலிருந்து

எழுப்பிவிட்டது. தன்னைச்சுற்றி எங்கு பார்த்தாலும் கனத்த இருள் மூடிக்கொண்டு இருப்பதை அவன் கண்டான். தூரத்தில் பாசறையிலிருந்து வந்த விளக்கொளி தான் அவனுக்குப் பழய நினைவுகளைப் புகட்டிற்று. தான் இருப்பது குரு க்ஷேத்திரம் என்றும் மறுநாட்காலையில் தான் மகத்தானபோர்செய்யவேண்டு மென்றும் அவனுக்குத் திடீரென்று புலப்படவே சகிக்கமுடியாத ஒரு பெரும் துயரம் அவனுக்குள் உண்டாயிற்று. அவனும் "ஐயோ" என்று திடுக்கிட்டு அலறினன். ஆனல் அந்தத்துயரம் ஒரு க்ஷணப்பொழுது தான் இருந்தது, மறு க்ஷணத்தில் ஸ்ரீ கிருஷ்ணன் புன்னகையோடு எதிரில் நிற்பதைக்கண்டான்.

அர்ச்சுனனும் சிரித்துக்கொண்டே, "கிருஷ்ண பொழுது அதிகமாய் விட்டது போலிருக்கிறது, இனி நாம் போய் செய்ய வேண்டியது ஒன்றும் இல்லாவிட்டாலும் சாப்பாடு முடித்துக் கொண்டு சிற்றரசர்களுக்கு விடைகொடுத்து அனுப்பிவிட்டுச் சீக்கிரம் படுத்துக்கொள்ள வேண்டும். அப்பொழுது தான் விடியுமுன் எழுந்திருந்து போர் கோலம்பூண்டு ரணக் களத்தில் தயாராக இருக்கமுடியும். உன் குழலே குழல், கிருஷ்ண, அதன் மகிமையை யாரால் சொல்லக்கூடும், வா, போவோம்," என்ருன்.

சற்று நேரத்திற்கெல்லாம் ஸ்ரீகிருஷ்ணனும் அர்ச்சுனனும் தம் கூடாரத்திற்கு வந்து சேர்ந்துவிட்டார்கள். உதியஞ்சேரல் ஆக்கினையினல் போர் வீரர்களுக்கு என்று சமைக்கப்பட்டிருந்த ஆகாரத்தைப் புசித்துவிட்டு இரவில் எதிரிகள் தம்மைத்தாக்கா வண்ணம் எடுத்துக்கொள்ள வேண்டிய பாதுகாப்பு முறைகளைப் பூர்த்திசெய்து தம்மைச்சூழ்ந்திருந்த சிற்றரசர்களுக்கும் விடை அளித்துவிட்டு இருவரும் கூடாரத்தில் சயனித்துக் கொண்டார்கள்.

௪

அர்ச்சுனனுக்கு எப்பொழுதும் வெகு இலேசான தூக்கம். அதனால்தான் அவனுக்கு குடாகேசன் அதாவது தூக்கத்தை வென்றவன் என்ற பெயர் வழங்குகிறது. சொற்ப சப்தம் கேட்டாலும் அவன் உடனே விழித்துக்கொண்டு விடுவான். அன்றிரவு நல்ல நிசி வேளையில் காற்று ஒரு சற்று பலமாக வீசிற்று. கூடாரத்தின் திரைச்சீலைகள் சலசலவென்று அசைந்தன. அர்ச்சுனன் கண் விழித்தான். ஒரு நால்வர் கிழப்பிணம் ஒன்றைப் பாடைகட்டி எடுத்துப்போவதாக அவனுக்குத் தோன்றிற்று. படுக்கையைவிட்டு எழுந்திருந்து கிட்டச்சென்று உற்று நோக்கினான். ஒன்றும் காணப்படவில்லை எதோ கனவு என்று மறுபடிபடுத்து உறங்கிவிட்டான்.

பொழுது விடிய இன்னும் சில நாழிகைகள்தான் இருந்தன. அச்சமயத்தில் பெரியதோர் சத்தம் அங்கு கேட்டது. அர்ச்சுனன் திடுக்கிட்டு விழித்துக்கொண்டு தன் படுக்கையின் மேல் உட்கார்ந்து கொண்டான். கூடாரம் முழுவதும் இருட்டாகவே இருந்தது. ஆனால் அங்கு ஓர் மூலையில் இரண்டு உருவங்கள் ஒன்றோடொன்று மல்லயுத்தம் செய்துகொண்டிருந்தன. அர்ச்சுனனுக்கு ஒன்றும் விளங்கவில்லை. என்னநடக்கிறது என்று உற்று நோக்கிக்கொண்டு இருந்தான். விந்தையிலும் விந்தை! ஒரு சிறுவனும் நல்ல வயோதிகன் ஒருவனும் போராடிக்கொண்டிருந்தார்கள். சிறுவன் குழந்தைப் பருவத்தைக்கூட தாண்டி இருக்கவில்லை. கண், மூக்கு, கைகால் ஒன்றும் இன்னம் திடப்பட்டிருக்கவில்லை. அவனுடைய ஐம்புலன்களிலிருந்து ஒரு அசாதாரண ஒளி மின்னலைப்போல ஜொலித்தாலும் அவன் தேசம்முழுவதும் கனத்த இருளால் மூடப்பட்டு ஒளியற்று கிடந்தது. அவனுடைய பிடிவாதமும் விடாமுயற்சியும் வெகு வியக்கத்தக்கதாகவே இருந்தது. எதிரியாகிய கிழவன் சும்மா இருந்தாலும்கூட அவனைச் சிறுவன்

ஓயாது தாக்கி காயப்படுத்துவான். எவ்வளவு முறை கிழவனால் தோற்கடிக்கப்பட்டாலும் இளைஞன் சிறிதும் மனம் குலைய வில்லை. கிழவன் கோபத்தால் முகம் கறுத்து இருந்தபோதி லும் வெகு அந்தமானதோற்றத்துடன் காணப்பட்டான். வயது அதிகமாக இருந்ததால் கண்பார்வை அவனுக்குச் சற்று மங்க லடைந்து இருந்தது. ஆனால் கோபத்தால் அவன் கண்களி லிருந்து கிளம்பும் தீப்பொறிகள் அதிக பயங்கரமாக இருந்தன. அவன் காதுகளும் சிறிது சிறிதாகச் சுருங்கிவந்தன. அவ னுடைய கூர்மையான மூக்கும், துடிக்கும் உதடுகளும், அகன்ற வாயும் உரத்த குரலும் அவனுக்குள்ள பெரும் அதிகாரப் பதவி யைக்காட்டின: அவன் தலைமயிர் பாலைப்போல வெளுத்து இருந்தாலும் அவனுடைய நீண்ட கைகளும், அகன்ற மார்பும், நிலைபெயராத கால்களும் அவன் மகா பலசாலி என்பதை விளக் கின. கண்யமும் பலமும் நிறைந்த இந்த வயோதிகனை அச் சின்னஞ் சிறுவன் சற்றும் அஞ்சாது தாக்கிவந்தான். கிழவன் அவனை எவ்வளவுதான் அடித்தாலும் அவன் அழவேமாட்டான், கலகலவென்று சிறித்துக்கொண்டு கிழவனைப் பரிகாசம் செய் வான். கிழவனுக்கு இதனால் கோபம் அதிகமாய் மூண்டுவிடும். அவனை தகுந்தபடி தண்டிக்கப்போவான். அப்போது சிறுவன் சமயம் பார்த்து நல்ல மர்ம ஸ்தானத்தில் கிழவனை உதைத்து விட்டு அவன் கையில் அகப்படாமல் தப்பித்துக் கொள்வான். இவ்விருவருக்குள்ளும் மற்போர் வெகு நேரமாக நடந்து வந்த தைப்போலக் காணப்பட்டது. கிழவன் உடம்பெல்லாம் காயமாய் இருந்தது. சிறுவனுக்கு ஏற்படும் காயம் ஒவ்வொன்றும் அரை நொடியில் ஆறிவிடும். இவர்களுக்குள் யாராவது ஒருவன் மடிந் தால் ஒழிய போர்முடியாதுபோல் இருந்தது. முதல் முதலில் கிழவன் சிறுவனை நசுக்கிவிடுவான் என்பதில் சந்தேகம் இருக் கவே இல்லை. போர் முற்ற முற்ற சிறுவனுடைய மனத்திட்பம் வளர்ந்து வந்தது. கடைசியாகச் சிறுவன்தான் வெற்றியடை வான் என்பது உள்ளங்கை நெல்லிக்கனிபோல விளங்கிற்று.

இந்த கோரக் காக்ஷியைப் பார்க்கப் பார்க்க அர்ச்சுனனுக்கு வியப்பு உண்டாயிற்று. என்ன காரணம் பற்றியோ அவனால் எழுந்திருந்து இதைத் தடுக்க முடியவில்லை. இந்த மல்லயுத்தம் வெகு அதர்மமானது என்று அவனுக்குத் தோன்றிற்று. அவ லக்ஷணமான சிறு துஷ்டப்பயல் ஒருவன் கண்யமான ஒரு பெரிய மனிதனை ஏளனம்செய்து வீண்சண்டைக்கு இழுத்து அவன் மனதையும் தேகத்தையும் புண்படுத்துவது என்றால் யாருக்குத்தான் சகிக்கும்? சிறுவன் சற்றுநேரம்கூட சும்மா இருக்கமாட்டான். கிழவனை எப்படியாவது தொலைத்துவிடுவது என்று தீர்மானித்தவனாகக் காணப்பட்டான். இந்த இடை யறாத போரில் கிழவனைக் கடைசியாகச் சிறுவன் கீழே தள்ளி விட்டு அவன் ரத்தத்தை எல்லாம் உறிஞ்சி விட்டான். அர்ச்சுன னுக்கு பொருக்கமுடியாத கோபம் வந்து விட்டது. இந்த கோரச் செய்கையைக் காணும்போது அவனால் சும்மா இருக்க முடியவில்லை. கண்களை மூடிக்கொண்டு தன் பலத்தை ஒரு முகப்படுத்தி அச்சிறுவன்மேல் ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்தான். கைகளை வீசி அவனைக் கெட்டியாகப் பிடித்தான். இடிமுழக் கம் போன்ற ஒரு பெரிய அட்டஹாஸச்சிரிப்பு அவன் காதில் விழுந்தது. அர்ச்சுனன் கண்களைத்திறந்து பார்த்தான்! பொழுது விடிய ஆரம்பித்தது, சிறுவன் எங்கும் காணப்பட வில்லை! தன்னைத்தானே கைகளால் இறுகப் பிடித்துக்கொண் டிருப்பது அர்ச்சுனனுக்கு அப்போது விளங்கிற்று! நாற்புறமும் திரும்பிப்பார்த்தான். ஸ்ரீ கிருஷ்ணன் புன்னகையோடு படுக் கையில் எழுந்து உட்கார்ந்திருந்தான்.

— கிருஷ்ணா நான் கண்ட காக்ஷியை நீயும் கண்டிருக்க லாமே, அது என்ன கொடுமையாக இருக்கிறது! அந்த கோரச் செய்கை எனக்கு நன்றாக விளங்கவில்லை. இது என்ன அனியாயப்போர்! பெரியவனைச் சிறுவன் வலிய சண் டைக்கு இழுத்து அவனைக் கொல்வது எவ்வளவு அக்கிரமம்!

அந்த ராக்ஷஸப்பயல் எங்கே மாயமாய்ப் போய்விட்டான்? எனக்குள் அந்தர்தானமாய் விட்டான் போலிருக்கிறதே! அந்தப் பொடிப்பயல் துஷ்டனாக இருந்தாலும் அவன் விடாமுயற்சியும் தீரத்தனமும் புத்தி நுட்பமும் வெகு வியக்கத் தக்கதாக இருந்தது. இக்கொடிய காக்ஷிக்கு ஏதோ உட்பொருள் இருக்க வேண்டும். அதை நீ எனக்கு சற்று விளக்குவாயா? என்று அர்ச்சுனன் கேட்டான்.

— இக் காக்ஷி உட்பொருள் நிறைந்தது என்பதில் சந்தேகம் இல்லை. அச்சிறுவன் யார் என்பதையும் எங்கே போனான் என்பதையும் நான் உனக்குச் சொல்லவேண்டுவதில்லை. உன் அந்தராத்மாவை நீயே சோதிப்பாயாகில் அப்பொழுது உனக்கு எல்லாம் தெளிவாக விளங்கும். இப்போது பொழுது விடிந்து வருகிறது, சைனிகர்கள் தத்தம் வேலைகளை அவசரமாக முடித்துக்கொண்டு உன்னை எதிர்பார்த்துக்கொண்டு இருப்பார்கள். ஆகையால் இதை ஆராய்வதில் காலதாமதம்செய்வது சரியன்று. நீ உன் காலைக்கடன்களை முடித்துக்கொண்டு தயாராய் இரு, இதோ நான் வந்து விடுகிறேன்.

௫

ஸ்ரீ கிருஷ்ணன் கிழக்கு திக்கிலுள்ள ஓர் தனி இடம் தேடிச்சென்றான். அங்குள்ளதோர் உயர்ந்த மரத்தின் மேல் ஏறி அதனுடைய உச்சிக்கிளை ஒன்றின்மேல் சாய்ந்துகொண்டு கீழ்வானம் வெளுத்து வருவதை உற்று நோக்கிக் கொண்டிருந்தான். அப்பொழுது தான் அருணோதயமாய் இருந்தது. இருளும் ஒளியும் மற்போர் புரிந்து வருவதைப்போல் காணப்பட்டது. எங்கும் பாய்ந்து கிடந்த கனத்த இருள் அருணனுடைய நீண்ட கதிர் வாட்களால் மாலை மாலையாகக் கிழிக்கப்பட்டிருந்தது. சூர்யனுடைய பிம்பம்கூட இன்னும் காணப்படவில்லை. நொண்டி அருணன் ஒருவனே தனியாகத்தடித்த இருளை ஓட்டி

விட ஆரம்பித்தான். மைபோல் கறுத்திருந்த இருள் சற்று சற்றாக சாம்பல் நிறம் பெற்றுவந்து கடைசியாக முற்றிலும் அற்றுப்போய் விட்டது.

வானமும் வரவர வெளுத்து வந்தது. பக்ஷிகள் எல்லாம் தாம் இரவில் அடைந்திருந்த இடங்களிலிருந்து பெயர்ந்து அதி மதுரமான குரலோடு பாடத்தொடங்கின. குயில்களும் மைனாக்களும் நாகணவாய்ப் புட்களும் ஒன்றுகூடி நயம் மிகுந்த சுருதி லய தாளங்களோடு சுயம்பிரகாசனான சூரியபகவானை வேண்டி அழைப்பதுபோல இருந்தது. சின்னஞ்சிறு பறவைகள் வெகு சந்தோஷத்தோடு தம் வாலை மேலும் கீழுமாக அசைத்துக் கொண்டு இனிய மெல்லிய ஒலியுடன் கிளையிலிருந்து கிளைக்குத் தாவிக் குதிப்பது அவைகள் ஒளியாகிய பெரு வெள்ளத்தில் ஜலக்கிரீடை செய்வதைப்போல இருந்தது. சிங்கம் புலி முதலிய பெரிய பெரிய துஷ்ட மிருகங்கள் எல்லாம் இனி இருள் மறுபடியும் வரும் வரை நம் வஞ்சகம் பயன்படாது என்று மலை குகைகளுக்குள் ஓடி ஒளிந்தன. அணில் முதலிய அற்ப ஜந்துக்கள் முதல் பெரிய காட்டு யானைபரியந்தம் உள்ள ஜீவராசிகள் எல்லாம், தாம் வெகு ஆவலுடன் எதிர்பார்த்திருந்த ஒளியைப் பெற்ற ஆனந்தத்தால் அங்கு மிங்குமாக ஓட ஆரம்பித்தன. புள்ளிமான் குட்டிகளும் பசுக்கன்றுகளும் ஆட்டுக்குட்டிகளும் வானத்திற்கும் பூமிக்குமாக துள்ளிக்குதித்து விளையாடின. குரு க்ஷேத்திரத்தில் ஏழுகடல்களும் திரண்டு வந்ததைப் போல ஒன்றுகூடி நிற்கும் பதினெட்டு அக்ஷௌஹிணி படையாட்களும் சூர்யன் உதயமான உடனே அர்க்கியம் கொடுத்து அவனை அர்ச்சிக்கத் தயாராகி இருந்தார்கள்.

பெரிய பெரிய விருக்ஷங்களும் சின்னஞ்சிறு புற்பூண்டுகளும் நுண்ணிய கொடிகளும் மரகதத்தைப் பழிக்கும் அழகிய பசுமை வாய்ந்த இலைகளைத் தரித்துக்கொண்டு இடைஇடையே நக்ஷத்திரம் போன்ற வெண் மலர்களையும், செம்மலர்களையும்,

மஞ்சள் மலர்களையும் தாங்கி வெகு அலங்காரத்துடன் சூரியனை நமஸ்கரிக்கக் காத்துக் கொண்டிருந்தன. மந்த மாருதமும் மலர்களின் நாநாவித வாசனைகளை யெல்லாம் ஒன்று கூட்டி அதி மனோகரமான ஒரு சுகந்தத்தை எங்கும் பரப்பி வந்தது. நதிகளும், குளங்களும், வாவிகளும் தம்முடைய நிர்மலமான நீரைச் சூரியனுக்கு முகம்பார்க்கும் கண்ணாடியாகத் தயாரித்து வைத்துக் கொண்டிருந்தன. "அழகுக்கோர் அவதியுண்டோ" என்றார் கம்பர். அதுவும் ஸர்வ ரஸங்களுக்கும் உறைவிட மாகிய மகா பிரகிருதி தன்னை அசாதாரணமாகச் சிங்காரித்துக் கொள்ள முயன்றால் அந்த அழகை வர்ணிக்க யாரால் முடியும்! நாம் சொல்லக்கூடியது எல்லாம்: எங்குபார்த்தாலும் அழகு! எங்கு பார்த்தாலும் சிரிப்பு! எங்குபார்த்தாலும் ஆனந்தக்களி! இவ்வளவு ஏற்பாடுடன் பிரகிருதிதேவி தினகரன் வரவை அன்று காலை ஆவலோடு எதிர் நோக்கி நின்றாள். இந்த ஸௌந்தர்யம் போதாது என்று பால சூர்யனும் சுவர்ணமயமான தன் முன் கிரணங்களை அனுப்பி மலைச்சிகரங்களையும் விருக்ஷச் சிகரங்களை யும் பொன்பாலால் பூசிவிட்டான். இப்பொன் கிரணங்கள் பூமி தேவியை முதலில் ஸ்பரிசிக்கும்போது ஏற்படும் வனப்பைக் கண்டு, "யதோ வாசோ நிவர்தந்தே அப்ராப்ய மனஸா ஸஹ" (பிரம்மத்தைக் கரைகாணாது வாக்கும் மனஸும் திரும்பிவிடும்) என்று உபநிஷத்துகள் சொல்வதைப்போல வாக்கும் மனஸும் திரும்பி விடுகின்றன. சற்று நேரத்திற்கெல்லாம் பொன்வர்ணம் மாறி எங்கும் பளபளவென்று ஜொலிக்கும் ஒளி பரவிவிட்டது.

வைகறையின் ஒரு நாழிகைக் காலத்திற்குள் எல்லையில்லாத அழகு சொரிவதை மரத்து உச்சியில் இருந்த ஸ்ரீ கிருஷ்ணன் ஒன்று விடாது கவனித்து வந்தான். அவனுடைய மனதில் இச்சூர்யோதயம் ஓர் பேரானந்தத்தை உண்டாக்கிற்று. "ஆகா! புதுமை என்பது எவ்வளவு வனப்புடன் இவ்வுலகில் பிறக்கிறது!" என்று தனக்குள்ளே சொல்லிக்கொண்டான். ஆனால் சூர்யப்பிரகாசம் அதிகரித்துவிடவே அவனுக்குக் குரு

க்ஷேத்திரப்போர் ஞாபகத்திற்கு வந்தது. அப்போது அவன் தேகம் சற்று நடுக்கமுற்றது. நித்ய கல்யாணியாகிய இந்தப் பிரகிருதிதேவி தன் பழைய உடைகளை நீக்கி புதுக்கோலம் பூணும்பொழுது கேவலம் மிருகங்களும் ஜடப் பொருள்களும் கூட மகிழ்ச்சியடைகின்றன, அறிவு என்னும் பாக்கியத்தைப் பெற்ற மனித ஜா தி மா த் தி ர ம் வாள் உருவிப்போர்செய்து கோடிக்கணக்காய் மாய்ந்து விடுகிறது. இதுவும் ஒரு விந்தை என்று சொல்லிக்கொண்டே ஸ்ரீ கிருஷ்ணன் மரத்தை விட்டு இறங்கித் தன் காலைக்கடன்களை முடித்துக்கொண்டு அர்ச்சுனன் கூடாரத்திற்கு வந்து சேர்ந்தான்.

# ஸ்ரீமத் பகவத் கீதை

## அத்தியாயம் க.

---

தர்மக்ஷேத்திரமாகிய குருக்ஷேத்திரத்தில் விடியற்காலம் முதல் படையாட்கள் பர்வகாலத்துக் கடலின் அலைகளைப்போல இடைவிடாது வந்து குவிந்து கொண்டிருந்தார்கள். பதினொரு அக்ஷௌஹிணிகொண்ட கௌரவ சேனைகள் தமக்கு மேற்குப் புறத்தில் இருந்த பாண்டவ சேனைகளை எதிர்நோக்கி நின்றன. பாண்டவர்களுடைய ஏழு அக்ஷௌஹிணிகளும் கீழ் திசையை நோக்கிக்கொண்டு அப்பொழுது தான் உதயமாகும் சூர்ய பகவானை வெகு பக்தியோடு நமஸ்கரித்து, அவனுடைய நல்வரவின் பொருட்டு அவனைத் துதித்து அழைப்பது போல இருந்தன.

யுக ஸந்தியின் முதற் சூரியன் அன்றுதான் உதயமானபடியால் கௌரவ பாண்டவசேனாமுகங்கள் ஒன்றையொன்று நோக்கிநிற்கும் நிலைமை கவனிக்கத்தக்கது. பெரு வெள்ளம் போலப் பொங்கிவரும் திருதராஷ்டிரர்கள் குருடர்களைப்போல லோகமித்திரனை கதிரவன் ஸர்வமங்களங்களோடு உதையமாவதைக் கருதாமல் தம்முடைய காமக்குரோதங்களையே பெரிதாக எண்ணி அந்தச் சூரியனுக்கு புறங்காட்டிக்கொண்டு நின்றது ஒளி தேடுபவர்களைத் தடுத்துத் தாமும் இருளையே நாடக் கருதுவதுபோல்காணப்பட்டது. குறைந்தசேனாபலத்தையுடைய பாண்டவர்கள் சூர்யோதயத்தைக்கண்டு பெருமகிழ்ச்சிகொண்டு அச்சூரியனை அணுகும்பொழுது இடையில் எவ்வளவு பெரும் தடைகள் குறுக்கிட்டாலும் அவைகளைப் பொடிசெய்து முன்னேற நிச்சயித்தவர்களைப்போல ஆயத்தமாக இருந்தார்கள். ரணக்களத்தில் சற்று தூரத்தில், இறந்தகாலமே உருவெடுத்து நிகழ்

கால வருங்கால விஷயங்களையே அறியாத குருடனான திருத ராஷ்டிரன் தேரில் உட்கார்ந்திருந்தான். நிகழ்கால வருங்கால செய்திகளைத் தன் ஞான திருஷ்டியால் அறிந்த ஸஞ்ஜயன் திருதராஷ்டிரன் தேரை நடத்திக்கொண்டு நிகழ்வனவற்றை யெல்லாம் அவனுக்குச் சொல்லுகிறான். ஸ்ரீமத் பகவத்கீதை என்று சொல்லப்படும் ஸ்ரீ கிருஷ்ணார்ச்சுன சம்வாதத்தை ஒரு சிறிதும் விடாது திருதராஷ்டிரனுக்குச் சொல்லுவதற்காக ஸ்ரீ வியாச பகவானருளால் ஸஞ்சயனுக்கு யாவற்றையும் நேரில் கேட்டதுபோல அறிந்துகொள்ளக்கூடிய சத்தி கிடைத் திருந்தது.

ரணக் களத்தில் இரு சேனைகளும் ஒன்றையொன்று தாக் குவதற்காக நோக்கிக்கொண்டு நின்றன. ஒரு புறத்தில் படை வளப்பெருக்கும் யுத்த சாஸ்திர நிபுணர்களான சேனைத்தலைவர் களின் தொகையும் வெகு ஜாக்கிரதையோடு சேர்க்கப்பட்டிருந் தன. மறு புறத்தில் முன் கூறிய சேனைத்தலைவர்களின் முக் கிய சிஷ்யர்கள் தம் பக்ஷத்தில் தான் தருமம் இருக்கிறதென்ற பூரண நம்பிக்கையுடன் போருக்குத் தயாராக இருந்தார்கள். பெருவளம் பொருந்திய விஸ்தார நாடுகளை ஆளும் பராக்கிரம சாலிகளான அரசர்களும், தனுர்வேதத்திலும் மல்ல யுத்தத்திலும் ரதம் நடத்துவதிலும் வெகு தேர்ச்சியுள்ள படைத்தலைவர்களும் புடை சூழ்ந்து நிற்க மத்தியில் பீஷ்மர் பெருமான் மின்னல் ஒளி நிறைந்த மேகங்களுக்கு மத்தியில் சந்திரன் உதிப்பதைப் போல விளங்கினார். அவருடைய பால்போன்ற தலைப்பாகை யும் வெண் குடையும் சுப்ரமான கவசமும் வெகு மேன்மை யுடன் பிரகாசித்தன. துரோணரும், கிருபரும், கர்ணனும், அசுவத்தாமாவும் தத்தம் சேனைத் தலைமையில் இருந்துகொண்டு சாஸ்திர முறையின் பிரகாரம் போரைச் சரிவர நடத்துவதில் உன்னிப்பா யிருந்தார்கள். வரம்பு கடவாது கொந்தளித்துக் கொண்டிருக்கும் கடலைப்போல இப்பெரும் கௌரவ சேனைகள் நிற்கையில் துர்யோதன ராஜன் துரோணரிடத்திற்கு வந்து,

" ஆசார்யரே, பாண்டவர்களுடைய பெரும் சேனையைப்பாரும்; தங்களுடைய புத்திசாலியான சிஷ்யன் துருபதனும், யுத்தத்தில் பீமார்ச்சுனர்களுக்குச் சமானமானவர்களும் மகா சூரர்களும் வில் வித்தையில் தேர்ந்தவர்களுமான யுயுதானன், விராடன், திருஷ்டகேது, சேகிதானன், காசிராஜன், புருஜித்து, குந்தி போஜன், சைபியன், யுதாமன்யு, உத்தமௌஜன், ஸௌபத்திரன், திரௌபதேயர்கள் முதலிய மகாரதர்கள் எல்லாரும் சேனாமுகத்தில் சித்தமாக நிற்கிறார்கள். துருபதன் இவர்களை அணிவகுத்திருக்கிறான் நம்மவர்களுக்குள் முக்கியமானவர்களைக் குறிப்பாக மாத்திரம் எடுத்துச் சொல்லுகிறேன் கேளுங்கள். தாங்கள், பீஷ்மர், கர்ணன், கிருபர், சமதிஞ்ஜயன், அசுவத்தாமா, விகர்ணன், சோமதத்தன் முதலியவர்களோடு கணக்கில்லாத சூரர்கள் என்பொருட்டுப் பிராணனைத் துறந்தவர்களாக நிற்கிறார்கள். இவர்கள் கைப்படைகளில் மகா வல்லவர்கள். யுத்தசாஸ்திரத்தில் எல்லாருமே தேர்ந்தவர்கள் இருந்தாலும் பீஷ்மர் காவலிலிருக்கும் நம் சேனையைவிட பீமன் காவலிலிருக்கும் அவர்கள் சேனை எண்ணத்தக்கதாக இருக்கிறது. ஆகையால் ஒவ்வொருவரும் தத்தம் பகுதியில் நின்றுகொண்டு எல்லோரும் பீஷ்மரையே காத்து நில்லுங்கள்," என்று சொன்னான்.

அதைரியப் பட்டிருக்கும் துரியோதனனுக்கு உற்சாகம் உண்டுபண்ணும் பொருட்டு குருக்களின் பாட்டனான பீஷ்மர் ஸிம்ஹநாதம் செய்துகொண்டு சங்கை எடுத்து ஊதினார். அதன்பேரில் சங்குகளும் முரசுகளும், பறைகளும், கொம்புகளும், காளைகளும் சத்திக்கத் தொடங்கின. அதனால் அங்கு விபரீதமான ஓர் பேரொலி கிளம்பிற்று.

போர்க்களத்தில் எங்கு பார்த்தாலும் இடி முழக்கம் போன்ற பேரொலி ஆகாயத்தைப் பிளந்து வருகையில் ஸ்ரீ கிருஷ்ணனும் அர்ச்சுனனும் வீற்றிருந்த பொன் தேரிலிருந்து சங்கத்தொனி இதற்கு எதிரொலிபோல முழங்கிற்று.

ஸ்ரீ கிருஷ்ணன் தன்னுடைய பாஞ்ச ஜன்யத்தையும், அர்ச்சுனன் தேவதத்தத்தையும் ஊதினார்கள். பீமன் பௌண்டிரத்தையும், யுதிஷ்டிரர் அனந்த விஜயத்தையும், நகுல சகதேவர்கள் சுகோஷ மணிபுஷ்பகங்களையும் எடுத்துச் சத்தித்தார்கள். விற்பயிற்சியுள்ள காசியன், மகாரதனான சிகண்டி, திருஷ்டத்யும்னன், விராடன், வெல்லப்படாத ஸாத்யகி, துருபதன், திரௌபதேயர்கள் முதலிய எல்லா அரசர்களும், புயவலியுள்ள ஸௌபத்திரனும், தனித்தனி தம் சங்குகளை ஒலித்தார்கள். இப்பேரொலி ஆகாயத்திலும் பூமியிலும் பரவி திருதராஷ்டிரர்கள் இருதயத்தைப் பிளந்தது. அணிகளாகப் பிரிக்கப்பட்டு நிற்கும் திருதராஷ்டிர சேனையைக்கண்டு கபித்துவஜனான அர்ச்சுனன் யுத்தத்திற்காகக்கூடி நிற்பவர்களைக் காணவேண்டி இருடீகேசனோடு தன் தேரை இரு சேனைகளுக்கும் மத்தியில் நிறுத்தும்படி கேட்டுக்கொண்டான்.

பொன்னாலும் இரத்தினங்களாலும் அலங்கரிக்கப்பட்டும் நூறு கண்டாமணிகளோடும் உச்சியில் நாட்டப்பெற்ற ஜயத்துவஜமான குரங்குக் கொடியோடும் பிரகாசித்து நின்றது அர்ச்சுனனுடைய அழகான தேர். மான் குட்டிகளைப்போல் துள்ளிக்கொண்டு முன் செல்லுவதற்காகத் துடித்து நிற்கும் அத்தேரின் வெண் குதிரைகளை ஸ்ரீ கிருஷ்ணன் செலுத்தி தேரை நடு அரங்கத்தில் நிறுத்திக்கொண்டு "இதோ யுத்தத்திற்காகக் கூடி நிற்கும் கௌரவர்களைப் பார், பார்த்தா" என்றான்.

அர்ச்சுனன் நாற்புறத்திலும் திரும்பித் திரும்பிப் பார்த்தான். இரு புறத்திலும், தந்தையர்களும், பிதாமகர்களும், ஆசார்யர்களும், அம்மான்களும், சகோதரர்களும், புதல்வர்களும், பேரமக்களும், சிநேகிதர்களும், மாமனார்களும், நண்பர்களுமாக இருந்தார்கள். இப்படி எல்லா சுற்றத்தார்களும் போர் முகத்தில் ஒன்றுகூடி நிற்பதைக்கண்டதே அவனுக்கு ஒன்றும் தோன்றவில்லை. புத்தியில் ஒருவித மயக்கம் உண்டாயிற்று.

கைகால்கள் நடுக்கமுற்றன, தேகம் சோர்வடைந்தது, அவனும் ரதத்தின்மேல் உட்கார்ந்து விட்டான். தீய சகுனங்கள் அவன் மனதில் தோன்றின. சென்ற இரவில் அவன் கண்ட மற்போர் ஞாபகத்திற்கு வந்தது. அவனுடைய நிலைமையையே மறந்து விட்டான். இரு புறத்திலும் கொந்தளித்து நிற்கும் சேனைகள் அவன் கண்ணுக்குத் தெரியவில்லை அவன் எந்தபக்கம் திரும்பினாலும் ஆகாயத்தை அளாவி நிற்கும் பிரம்மாண்ட உருவம் ஒன்றுதான் காணப்பட்டது. முன் இரவில் சிறுவனால் தாக்கப் பட்ட கிழவனுடைய உருவமாக அது இருந்தது, ஆனால் இப்பொழுது வெகு உயரமாக வளர்ந்துவிட்டிருந்தது. அக்கிழவன் தேகம் எவ்வளவு தான் அளவு மீறி வளர்ந்திருந்த போதிலும் பார்வைக்கு கண்யமுடையதாகவும் பெருந்தன்மை யுடையதாகவும் தான் காணப்பட்டது.

அர்ச்சுனனும் வியப்புடன் அப் பெரியோனை வெகு உன்னிப்பாய்ப் பார்த்தான். அளவுகடந்து நீண்டு பருத்திருந்த அவனது அவயவங்கள் சாதாரணத் தசைகளாலும் எலும்புகளாலும் ஆக்கப்படவில்லை. பலமனிதர்கள் ஒன்று கோர்க்கப்பட்டு கை, கால், கண், மூக்கு, காது, வாய், தலைகளாக அவன் சரீரத்தில் அமைக்கப் பட்டிருந்தார்கள். இதைக்கண்டு அர்ச்சுனன் பிரமித்து விட்டான். அப்படி கோக்கப்பட்டிருந்த மனிதர்கள் அவனுடைய நெருங்கிய பந்துக்களும், குருக்களும், நண்பர்களுமாக இருந்தார்கள். மகா சூரர்களான பீஷ்ம துரோணர்கள், யுதிஷ்டிர பீமர்கள் முதல் சாதாரண படையாட்கள்வரை எல்லோரும் ஒருவரோடொருவர் குவிந்து அவ்வயோதிகன் தேகத்தில் காணப்பட்டார்கள். இந்த அசாதாரணமான காட்சியைக் கண்டு திகைத்துநிற்கும் அர்ச்சுனனை அப்பெருங்கிழவன் சரீரத்தில் பொதிந்துகிடந்தவர்கள் யாவரும் கோபத்துடனும் வெறுப்புடனும் நோக்கினார்கள்.

. அவர்கள் தன்னை அருவருப்புடன் காண்பது இன்ன காரணத்துக்காக என்று அர்ச்சுனனுக்கு விளங்கவில்லை. "ஐயோ,

நான் இவர்களுக்கு ஒரு கெடுதியும் செய்யவில்லையே. இவர்கள் என்னை ஏன் வெறுக்கவேண்டும்? நானும் இவர்களில் ஒருவன் ஆயிற்றே! என் பேரில் அகாரணமாக கோபங்கொள்வது சரியா? என்று அவன் யோசித்துக்கொண்டிருக்கையில் தனக்குள் புதிய கிளர்ச்சி ஒன்று உண்டாவதை அவன் உணர்ந்தான். அவ்வுணர்ச்சியின் காரணமாக அவன் மனதில் ஏதேதோ புதுப் புது எண்ணங்கள் தோன்றின. இதுவரை தான் வாழ்ந்த உலகம் பொருளற்றதாகக் காணப்பட்டது. சிறுவர்கள் முதல் பெரியவர்கள் வரை எல்லாரையும் ஒரே கிழத்தனம் மூடிக் கொண்டிருந்தது. பிராம்மணர்களின் பிரும்ம வித்தியைகளிலும் சிற்பிகளின் திறமான வேலைகளிலும் க்ஷத்திரியர்களின் போர் முறைகளிலும், வைசியர்களின் பொருளீட்டத்திலும் தொழிலாளிகளின் செயல்களிலும், ஸ்திரீகளின் குலாசார முறைகளிலும், பாலர்களின் நித்திய விளையாட்டுகளிலும் கூட எவ்விதப்புதுமையும் காணப்படவில்லை பயனற்ற வாழ்க்கையே உலகத்தில் எங்கும் நடைபெற்று வந்தது. ஆகாயத்தில் எறியப் பட்ட கல் ஒன்று கையைவிட்டுப் பிரிந்த பிறகும் கூட கையிலிருந்து பெற்ற சக்தியின் வேகத்தினுல் எப்படி மேலுக்குப் போகிறதோ, ஆத்மா போனபின்பும் கூட தேகம் எப்படி பிராண சக்தியால் சலிக்கிறதோ, அதேமாதிரி உலகவாழ்க்கையும் முன் வழக்கத்தின் வேகத்தால் நடந்து வந்தது. கார்யங்கள் எவையும் விட்டுப்போகவில்லை. காவியங்கள், நாடகங்கள், சிற்பங்கள், சாஸ்திரங்கள் இன்னும் மற்றவைகள் எல்லாம் ஒன்று விடாது புதிது புதிதாக வெளிவந்தன. ஆனுல் இவைகள் எதிலும் ஜீவகளை இருப்பதாகக் காணப்படவில்லை. எல்லாம் பழயமுறைகளைத்தழுவி முன் ஏற்பட்ட வழிகளிலே பூர்வ வழக்கங்களின் வாஸனு வேகத்தால் நடைபெற்றனவே ஒழிய வேறில்லை. உண்மைப்பொருள் எதிலும் காணப்படவில்லை. அவனவன் செய்கைகளுக்குக் காரணம் எவனைக்கேட்டாலும் "இது சிஷ்டர்களால் செய்யப்பட்டது, இது குலாசாரம், இது

எங்கள் வீட்டு வாடிக்கை, இது வெறமே சாஸ்திரத்திற்காக," என்றெல்லாம் விடையளிப்பானே ஒழிய உண்மைப்பொருளுக்கு ஒத்து இருக்கிறதா என்று கவனிக்கமாட்டான். இப்படி எல்லாச் செய்கைகளும் பூர்வ வாடிக்கையை நாடியே செய்யப்பட்டன. சாதாணத்திலேயே மனிதன் செயல்களுக்கு பிரகிருதி தேவி வரம்பிட்டிருக்கிருள், அதோடு பூர்வ சம்ஸ்காரங்களும் ஒன்று கூடிவிட்டால் பகுத்தறிவுடன் கூடிய செயல்களே மனிதனுக்கு அற்றுப்போய்விடுகின்றன. சம்ஸ்கார பலத்தினுல், தான் செய்ய வேண்டிவரும் செயல்களை ஒவ்வொருவனும் தன்னுடையதாக பாவித்துக்கொண்டு விடுகிருன். பிறகு போலி வாழ்க்கையும் போலிச்செயல்களும் வெகு ஆடம்பரத்துடன் நடைபெறுகின்றன. இவ்விஷயங்கள் எல்லாம் அர்ச்சுனனுடைய அந்தராத்மாவில் தெளிவுபட்டிருந்தாலும் வியக்தமாக அவன் புத்திக்குப் புலப்படவில்லை. தன்னிடத்தில் கூடமாக வளர்ந்துவரும் இப் புதுக்கிளர்ச்சியைத்தான் தன்னுடைய மூத்தோர்களும், அருமை நண்பர்களும், தத்தம் பூர்வ வாசனையில் ஆழ்ந்தவர்களாய், பகைக்கிருர்கள் என்பது அவனுக்கு இலேசாகத் தெரியவந்தது. தன் சுற்றத்தாரைக் கோபமூட்டும் இப்புதுக் கிளர்ச்சியை தனக்குள்ளேயே இப்போதைக்கு அடக்கிவிடலாம் என்று எண்ணினுன். தன்னருமை நேயர்களும் நெருங்கிய பந்துக்களும் தனக்குப் பூஜ்யர்களான குருக்களும் வெறுக்கக்கூடிய ஒரு பொருளை —அது என்ன மேன்மை வாய்ந்ததாக இருந்தாலும் சரி—தான் ஏன் பாராட்டவேண்டும்? அதனுல் தனக்கு ஆகவேண்டியது என்ன? அதைத் தொலைத்து விட்டால் பந்து மித்திரர்களோடு சுகமே வாழலாமே? என்று இவ்வாறெல்லாம் எண்ண ஆரம்பித்தான். இவ்வெண்ணங்கள் அர்ச்சுனன் மனதில் தொடர்ந்து உதிக்கவே அவனுக்கு தான் யுத்தகோலம் பூண்டு நிற்பதும், இரு பெரும் சேனைகளுக்கு இடையில் ஸ்ரீ கிருஷ்ணனேடு தேரில் இருப்பதும் தெளிவாக விளங்கிற்று. கவலையின்றிப் புன்சிரிப்புடன் தன்னையே நோக்கிக் கொண்டிருக்கும் ஸ்ரீ கிருஷ்ணனைப் பார்த்து அர்ச்சுனன் பின் வருமாறு சொல்லலானுன்:

"கிருஷ்ணு, யுத்தத்திற்காகத் தயாராகி நிற்கும் நம்மவர்களைக்கண்டேன். ஆனால் அவர்களோடு போர் புரிய எனக்கு மனம் துணியவில்லை. என் கை கால்கள் நடுங்குகின்றன, வாய் வரண்டு போகிறது, சரீரம் குலைவுறுகிறது. உடம்பெல்லாம் மயிர் சிலிர்க்கிறது, காண்டீவம் கைநழுவுகிறது, உடல் முழுதும் எரிகிறது, என்னால் ஒரு நிலையில் நிற்க முடியவில்லை, என் புத்திமயங்குகிறது,கெட்டசகுனங்கள்தான் காணப்படுகின்றன. நம்மவர்களை யுத்தத்தில் கொல்வதனால் ஒரு நன்மையும் எனக்குப்புலப்படவில்லையே? கிருஷ்ணு. எனக்கு ஜயமும் வேண்டாம் அரசும் வேண்டாம் சுகமும் வேண்டாம். ராஜ்யத்தால். நமக்கு என்னபயன்? நமக்கு போகம் எதற்கு, உயிரோடிருப்பதுதான் எதற்கு? எவர்களுக்காக ராஜ்யத்தையும் போகத்தையும் சுகத்தையும் தேடுகிறோமோ அவர்கள் எல்லோருமே தம் பிராணனையும் தனத்தையும் பாராட்டாது இதோ நிற்கிறார்களே! ஆசார்யர்களும் தந்தையர்களும், புதல்வர்களும் பாட்டன்மார்களும் அம்மான்களும் மாமனார்களும் பேரன்களும் மைத்துனர்களும் சம்பந்திகளுமாக நிற்கும் இவர்களை, என் தலைபோனாலும், நான் கொல்ல மாட்டேன். மூவுலகும் எனக்குக்கிடைப்பதானாலும் இதை நான் செய்யமாட்டேனே, அப்படி இருக்கும்பொழுது இந்த மண்ணுலகின் ஆட்சிக்காக மாத்திரம் நான் இவர்களோடு போர் புரிவேனு? திருதிராஷ்டிரர்களைக் கொன்று நமக்கு என்ன இன்பம் கிடைக்கும், கிருஷ்ணு? நம் உயிரைக்கவரும் இவர்களைக்கொன்றால் பாவமேதான் நமக்குச் சம்பவிக்கும். ஆகையால் பந்துக்களாகிய திருதிராஷ்டிரர்களை நாம் கொல்லுவது சரியல்ல; சுவஜனங்களைக்கொன்று நாம் என்ன சுகம் அனுபவிக்கக் கூடும், மாதவா? குல நாசத்தால் உண்டாகும் கெடுதியும் மித்திர துரோகத்தால் வரும் பாதகமும் பேராசையால் புத்திமயங்கின அவர்களுக்குத் தெரியாவிட்டாலும் நாம் ஏன் இந்தப்பாவமான செயலிலிருந்து விலகத் தெரிந்துகொள்ளவில்லை? குலம் க்ஷயித்தால் வெகு நாளாக ஏற்பட்ட குல தர்மங்கள் அழிந்து விடுமே? குலதர்மம்

குன்றினால் நாட்டில் அதர்மம் தலை எடுக்கும். அதர்மத்தால் குலப்பெண்கள் கற்பழிவார்கள். ஸ்திரீகள் கற்பழிந்தால் வர்ண ஸங்கரம் உண்டாகிறது. வர்ண ஸங்கரத்தால் குலமழித்தவர்களின் முன்னோர்கள் சோறும் நீரும் இன்றி நரகத்தில் விழுகிறார்கள் இப்படிக் குலத்தை அழித்தவர்களின் தோஷத்தால் ஜாதி தர்மங்களும் குலதர்மங்களும் நாசமாகின்றன. குலதர்மமற்ற மனிதர்களுக்கு நரகத்தில் தான் நியதமான வாசம் என்று நாம் கேட்டில்லையா? ஜனார்தனா. ஐயோ, என்ன கொடிய பாவத்தைச் செய்யத் தலைப்பட்டோம்? ராஜ்ய சுகங்களில் ஆசைவைத்து ஸ்வஜனங்களையே கொல்லத்துணிந்தோமே! தீங்கு ஒன்றும் செய்யாது நிராயுதபாணியாய் நிற்கும் என்னை ஆயுதபாணிகளான திருதிராஷ்டிரர்கள் யுத்தத்தில் கொல்லுவார்களானால் அதுவே எனக்கு க்ஷேமத்தைத் தரும்.



## அத்தியாயம் உ.

---

இப்படி இரக்கத்தால் பரிதபித்துக் கண்ணும் கண்ணீரு மாய் அழுதுகொண்டிருக்கும் அர்ச்சுனனைப்பார்த்து மதுஸூ தனன் சொல்லுகிறான்.

"சமயமில்லாத இத்தருணத்தில் உனக்கு இக்கோழைத் தனம் எங்கிருந்து முளைத்தது, அர்ச்சுனா? ஆரியர்களால் வெறுக்கத்தக்கதும், நற்கதி, கீர்த்தி ஆகிய எதையும் பயக்காததுமாயிற்றே இது, பார்த்தா! பேடித்தனத்தை மாத்திரம் நீ அடைந்துவிடாதே, அது உனக்குத் தகுந்ததன்று. எதிரிகளை வாட்டும் நீ இப்புல்லிய நெஞ்சிளைப்பைத் தொலைத்துவிட்டு எழுந்திரு."

— பூஜ்யர்களான பீஷ்ம துரோணர்களின்பேரில் அம்பு களை நான் எப்படி எய்வேன், மதுஸூதனா? மகானுபாவர்களான குருக்களைக் கொல்லாமல் இவ்வுலகத்தில் பிச்சை எடுத்து உண் பதும் கூட மேலானதாயிற்றே! குருக்கள் பொருளாசையுடைய வர்களாகவே இருந்தாலும், அவர்களைக்கொன்று அனுபவிக்கும் போகங்கள் உதிரத்தில்தோய்ந்தவைகளேயாகும்! இந்தப்போரில் நாம் வெற்றி கொள்வது மேலாகுமா அவர்கள் நம்மை வெல்லு வது மேலாகுமா என்பது நமக்கு விளங்கவில்லை. யாரைக் கொன்றால் நாம் உயிர்வாழ இச்சிக்கமாட்டோமோ அதே திருத ராஷ்டிரத் தலைவர்கள் நம் எதிரில் போர்தொடுத்து நிற்கிறார் களே! கார்பண்யத்தால் கவரப்பெற்ற இயற்கையுடையவனாகி, தர்மாதர்மம் தெரியாத மனத்தோடு தவித்துக்கொண்டு உன்னை நான் கேட்கிறேன், மதுஸூதனா; தீர்மானமாக எது மேன்மை பொருந்தியதோ அதை நீ எனக்குச்சொல்லு. நான் உன் அடி யன்; உன்னை அடைக்கலம்புகுந்த என்னை நீ ஆட்கொண்டருள வேண்டும். வைரியற்றுச் செழித்தோங்கும் மண்ணுலக ஆட்சி யும் விண்ணுலக அதிகாரத்தையுமே நான் அடைந்தாலும் என் இந்திரியங்களை வாட்டும் இச் சோகத்தைப்போக்கும் வழி எனக் குப் புலப்படவில்லையே!

என்று இருஷீகேசனோடு சொல்லிவிட்டு விரோதிகளை வாட்டும் குடாகேசன் பேசாமல் தனக்குள் பொங்கியெழும் கவலை கடலில் அலைப்புண்டு கிடந்தான். நம்மைப் பெற்றெடுத்தவர்களும், நமக்கு அறிவு புகட்டி நம்மை ஒரு புருஷனாக்கி வாழச் செய்தவர்களும் நம் குழந்தைப்பருவமுதல் சகோதரர்களாகவும் நண்பர்களாகவும் நம்முடன் கூடி விளையாடிக்கொண்டிருந்த சுற்றத்தார்களை யெல்லாம் நான் எப்படிக் கொல்வேன்! அவர்கள் யாவரும் வெகு கூர்மையான புத்தி யுடையவர்கள், மகா மேதாவிகள், நல்ல பகுத்தறிவுடையவர்கள்; அவர்கள் ஊடுறுவிப் பார்க்காத சாஸ்திரம் கிடையாது, ஆத்மஞானததில் வெகு ஊக்கம் கொண்டவர்கள், ராஜ்ய தந்திரங்களில் ஆழ்ந்த ஞானமுடையவர்கள். ஒவ்வொருவரும் தனித் தனி இம் மண்ணுலகை ஆளவல்லவர்கள். மனித அறிவுக்கே வரம்பை எடுத்துக் காட்டிய இப் பேரறிஞர்களை யுத்தத்தில் கொன்று உலகத்துக்கு ஒரு பெருத்த நஷ்டத்தை நானு செய்கிறது! பீஷ்மர், துரோணர், கிருபர் முதலியவர்களும், கர்ணனும் மற்றுமுள்ள என் நண்பர்களும் எவ்வளவோ மேன்மையுடையவர்களாயிற்றே. அவர்களுடைய உதாரசிந்தையும், தயாளகுணமும் பூத தயையும் நிகாற்றனவாயிற்றே. அவர்களுடைய பரிசுத்தமான இருதயம் இனிவேறு எங்குகாணலாம். உத்கிருஷ்டமான விஷயங்களிலும் எண்ணங்களிலும் அவர்களுக்குள்ள பற்றுதலுக்கு ஈடும் இவ்வுலகில் உண்டோ! காமக்குரோதங்களை வேரோடறுதது இந்திரியங்களை நன்றாக அடக்கிய இவர்களால் இவ்வுலகத்திற்குக் கிடைக்கும் நன்மையை நான்தானு விலக்கவேண்டும்! என் கையால் இவர்கள் மடிந்தால் குருபக்தி, பேரன்பு முதலியவைகள் அடியோடு அற்றுப்போய்விடாதா? தர்மத்துள் இவர்களுக்குள்ள பக்தியும் சிரத்தையும் இனியாருக்கு உண்டு? அவர்கள் கையிலெடுத்த எந்தக்கார்யம் முடிவுபெறுது போகும்? அவர்களுடைய திரததனமும் விடாமுயற்சியும் கை வன்மையும் தர்மத்திற்கு எவ்வளவோ அனுகூலமாக இருக்கின்றனவே! தர்மமே உருவாக

நிற்கு மிவர்களோடு போர்புரிந்து ஜயித்து விடுவேனுனல் உலகத்திற்குப் பெரு நஷ்டத்தை விளைவிப்பதோடு ஜனங்களின் பழிக்கும் நான் காரணமாவேன்.

என்று இப்படிப் பலவாருக எண்ணி எண்ணி அர்ச்சுனன் மனம் தளர்ந்து கண்ணீர் சொரிந்துகொண்டு ஒரே பிடிவாதமாய் "நான் இனி போர் செய்யமாட்டே" னென்று கோவிந்தனிடம் சொல்லிவிட்டுச் சும்மா இருந்து விட்டான்.

இருபெரும் சேனைகளுக்கு மத்தியில் அழுதுகொண்டிருக்கும் சுத்த வீரனைப்பார்த்து, ஸ்ரீ கிருஷ்ணன் சிரித்துக்கொண்டு பின்வருமாறு சொலலுகிருன்:

"துக்கப் படுவதற்கு உரித்தில்லாத விஷயங்களுக்காக நீ துக்கப்படுகிருய்; பேச்சிலோ, அறிவுமுதிர்ந்த வாதங்களை பேசுகிருய்; அறிஞர்கள் இறந்தவர்களைக் குறித்தாவது இறவாதவர்களைக் குறித்தாவது துக்கிப்பதில்லை நானுவது நீயாவது இவ்வரசர்களாவது இதுவரையில் இல்லாமலிருந்ததும் கிடையாது, இனி இல்லாமலிருக்கப் போவதும் கிடையாது. இந்த தேகத்திலுள்ளவரை உயிர்களுக்கு எப்படி கௌமாரம், யௌவனம், மூப்பு சாதாரணமோ அப்படியே வேறு உடல்களைப் பெறுவதும் சாதாரணம். இந்த விஷயத்தில் தீரன் எவனும் மயங்குவதில்லை.

சீதோஷ்ணங்களையும் சுகதுக்கங்களையும் கொடுக்கும் தன் மாத்திரைகள் நிலையற்ற வந்தேறிகள், அநித்தியமானவைகள், பார்த்தா, நீ அவைகளைச் சகித்துக்கொள். எந்த புருஷனை இவை வருத்துவதில்லையோ, எந்ததீரனுக்கு சுகமும் துக்கமும் சமமாகவே இருக்கிறதோ அவன் அமிருதத் தன்மை பெறுகிருன்.

அஸத்திலிருந்து ஸத்து உண்டாவதில்லை, ஸத்து ஒரு போதும் அஸத்தாக மாறுவதில்லை. உட்பொருள் அறிந்த யாவரும் இவ்விரு நிலைமைகளின் எல்லையைக் காண்கிருர்கள.

இங்குள்ளவைகள் யாவற்றிலும் வியாபித்து நிற்கும் பொருளுக்கு அழிவே கிடையாது. என்பதை நீ அறிந்துகொள். அதற்குக் கேடு ஒருவனாலும் இழைக்க முடியாது. நித்தியமான அழிவற்ற, மாறுதலில்லாத ஆத்மாவின் இந்த தேகங்கள் எல்லாம் முடிவுடையன. ஆகையால் பார்த்தா, நீ போர்செய். இந்த ஆத்மாவைக் கொலை செய்பவனென்று கருதுபவனும் கொல்லப்படுபவன் என்று கருதுபவனுமாகிய இருவரும் உண்மையை அறிகிறார்களில்லை. இவன் கொல்வதுமில்லை கொல்லப்படுவதுமில்லை. இவன் ஒருபோதும் பிறப்பதுமில்லை, இறப்பதுமில்லை; ஒருமுறை உளனாகில் மறுபடி இல்லாதவனாகப் போவதும் இல்லை. பிறப்பற்றவனாய், நித்தியனாய், என்றுமுளனாய், தொன்மைப்பட்டவனா யிருக்கும் இவன் கொல்லப்படும் சரீரத்தில் கொலையுண்பதில்லை, இவனை நாசமற்றவனாகவும் அழிவில்லாதவனாகவும் அறிந்த புருஷன் ஒருவன் எவனைக்கொல்விப்பான் எவனைக்கொல்வான்? ஒருவன் பழைய கிழிந்த ஆடைகளை விட்டு விட்டு எப்படி வேறு புதியவைகளை அணிகிறானோ அது போலவே ஆத்மா பழைய தேகங்களை விட்டுவிட்டு வேறு புதியவைகளை அடைகின்றது. இவனை ஆயுதங்களும் துளைப்பதில்லை, நெருப்பும் எரிப்பதில்லை, நீரும் கரைப்பதில்லை, காற்றும் உலர்த்துவதில்லை. துளைக்கப்படாமல் கொளுத்தப்படாமல் கரையாமல் உலர்த்தப்படாமல் நித்தியனாய், எங்குமுளனாய், நிலைகுலையாதவனாய், அசைவற்றவனாய், என்றுமுளனாய், அவியக்தனாய், எண்ண முடியாதவனாய், மாற்றமில்லாதவனாய் இவன் இருப்பதாகச் சொல்லப்படுகிறான். ஆகையால் நீ இவனை இப்படிப்பட்டவனாக அறிந்து கொண்டு சோகமுறாம லிருக்கக்கடவாய்.

இப்படிக்கில்லாமல் அந்த ஆத்மாவை அடிக்கடி பிறப்பவனாகவும் மறிப்பவனாகவும் நீ எண்ணுவாயாகில் அப்பொழுதும் கூட நீ சோகமுறக் காரணமில்லை. ஏனெனில் பிறந்தவன் இறப்பதும் இறந்தவன் பிறப்பதும் நிச்சயம். ஆகையால் விலக்கவொண்ணாத இவ் விஷயத்தில் நீ சோகிப்பானேன்? பிராணி

களின் ஆரம்பம் தெளிவாக இல்லை, அவைகளின் மத்திய நிலைமை தான் விளங்குகிறது, அவைகளின் முடிவுகூடத் தெளிவற்றுத் தான் கிடக்கிறது. இந்த நிலைமையில் நீ ஏன் வருத்தமுற வேண்டும்? ஆத்மாவைக் குறித்து ஆலோசிக்கும் ஒருவன் அவனை ஒரு ஆச்சரியப் பொருளாகக் காண்கிறான், மற்றொருவன் அவனைப்பற்றி ஆச்சரியமாகவே பேசுகிறான், வேறொருவன் அவனைப்பற்றி ஆச்சரியமாகவே கேட்கிறான். இப்படிக்கெல்லாம் கேட்டும் அவனைப்பற்றித் தெரிந்தவன் ஒருவனுமே கிடையாது. எல்லாருடைய தேகங்களிலுமுள்ள இந்த ஆத்மா ஒரு போதும் கொல்லப்படுவதில்லை. ஆகையால், பார்த்தனே, நீ எந்தப்பிராணியைக் குறித்தும் துக்கப் படவேண்டியதில்லை.

இக் காரணங்களெல்லாம் ஒரு புறம் இருக்கட்டும் அர்ச்சுனா, உன்னுடையச் சொந்த குலதர்மத்தைக் கவனித்த போதிலும் நீ குலைவுறக் காரணமில்லை. ஏனெனில் தர்ம யுத்தத்தைக் காட்டிலும் க்ஷத்திரியனுக்கு மேன்மை தரக்கூடியது வேறில்லை. சுவர்க்கத்தைக் கொடுக்கத்தக்க இம்மாதிரியான யுத்தம் அதிருஷ்டசாலிகளான க்ஷத்திரியர்களுக்குத் தானாகவே கிட்டுகிறது. இந்த தர்மமான போரை புரியாமல் நீ விலகி நிற்பாயாகில் அப்போது உன் தர்மத்தையும் கீர்த்தியையும் இழந்துவிட்டு நீ பாபத்தை அடைகிறாய். என்றென்றைக்கும் உன் அபகீர்த்தியையே ஜனங்கள் பேசுவார்கள். கண்யமுள்ளவனுக்கு அபகீர்த்தியைக் காட்டிலும் மரணம் மேலானது. பயத்தால் போர்க்களத்திலிருந்து நீ ஓடி விட்டதாக மகாரதர்கள் எண்ணுவார்கள். உன்னை நன்கு மதித்திருந்தவர்கள் எண்ணத்தில் கூட நீ அற்பனாகி விடுகிறாய். உன்னிடத்தில் தீங்கு நினைப்பவர்கள் சொல்லத்தகாத வார்த்தைகளை யெல்லாம் சொல்லி உன் சாமர்த்தியத்தையும் பழிப்பார்கள். இதைவிட துக்கமானது வேறு என்னவேண்டும்? நீ கொலையுண்டால் சுவர்க்கம் அடைவாய் ஜயித்தால் பூமி ஆள்வாய், ஆகையால், குந்தி மகனே, யுத்தத்தில் மன உறுதிகொண்டவனாய் எழுந்

திரு. இன்ப துன்பம், இலாப நஷ்டம், வெற்றி தோல்வி இவைகளை யெல்லாம் சமமாகக் கருதி யுத்தத்தில் நீ முழு மனதையும் செலுத்து, பிறகு உன்னை பாவம் அண்டாது.

ஸாங்கிய வழியைத் தழுவி இவைகள் உனக்குச் சொல்லப் பட்டன. இனி புத்தி யோகத்தில் இவைகளைப்பற்றி உள்ளதைக் கேள். நீ இந்த புத்தி யோகத்தைப் பெறுவாயாகில் கர்ம பந்தத்தை நீ நீக்குவாய். இதில் கிரமமாக தொடங்கப்பட்ட எந்த கார்யமும் நாசமடைவதில்லை. தடை என்பது இதில் கிடையாது; இதனுடைய தர்மம் சிறிதளவாக இருந்தாலும் பெரிய பெரிய பயத்திலிருந்து நம்மை காப்பாற்றிவிடும். விடாமுயற்சியோடு கூடின புத்தியானது ஒருமுகப்பட்டேதான் இருக்கும். முயற்சியறறவர்களுடைய புத்தி பல கிளைப்பட்டதாகவும் முடிவற்றதாகவுமாய் இருக்கும்.

வேதவாததததிலேயே பிரியமுடையவர்களாய் அதைவிட வேறொன்றுமில்லை யென்று சொல்லிக்கொண்டு காமத்தையும் சுவர்க்க போகங்களையும் நாடும் மூடர்கள், ஜன்ம கர்மங்களைப் பலனாக உடையதும் போகம் செல்வம் இவைகளைப் பெறுவதற்காகச் செய்ய வேண்டிய நானாவித கிரியைகளைக் குறிப்பிடுகின்றதுமான மலர் போன்ற பேச்சைப் பேசுகிறார்கள். போகத்திலும் செல்வத்திலும் ஊறி அவைகளில் நெஞ்சழிந்தவர்களுக்கு ஒருமுகப்படுத்தப்பட்ட விடா முயற்சியுள்ள புத்தி யோகம் கைகூடுவதில்லை.

ஸாத்வீகர், ராஜஸர், தாமஸர்களாகிய மூவகையினர்களுக்கும் வேண்டிய விஷயங்களைக் கொண்டுள்ளன வேதங்கள். நீ அம் முக்குணங்களையும் அதிக்கிரமித்து, துவந்துவமற்றவனாய், இடைவிடாத சத்துவ நிலைமையுடையவனாய், யோக க்ஷேமங்களைப்பாராட்டாது ஆத்மவசனாய் இரு. நாற்புறத்திலும் ததும்பிப் பெருகும் ஜலத்தையுடைய குளம் பயன்படுவதைப் போலத்தான் ஞானியான பிராம்மணனுக்கு எல்லா வேதங்களும் பயன்படுகின்றன.

உனக்குள்ள உரிமை செயலிலே மாத்திரம்தான், செய்கைப்பயனில் ஒருபோதுமில்லை. ஆகையால் செய்கைப்பயனை நீ எதிர்பாராதே, ஆனால் செயலற்ற நிலைமையையும் நீ தழுவி நிற்காதே யோகத்தில் ஊன்றியவனாகி பற்றில்லாமல் தனஞ்சயனே, கருமங்களைச் செய். மனதைச் சம நிலைமையில் வைப்பது தான் யோகமாகையால் உன் கார்யங்கள் ஸித்திபெற்றாலும் பெறாவிட்டாலும் நீ அந் நிலைமையிலேயே இரு. ஏனெனில் புத்தி யோகத்தைக் காட்டிலும் கருமத்தின் பயன் எவ்வளவோ இழிவானது. நீ புத்தி யோகத்தில் ஊன்றி நில். ஒரு பயனின் பொருட்டு முயலுகிறவர்கள் அற்பர்களாவார்கள். இப்படி புத்தி விஷயத்தில் ஒன்றுபட்டவன் தானெடுத்தவேலை சுகிர்தமாக முடிந்தாலும் துஷ்கிருதமாக முடிந்தாலும் அப்பயன்களை விட்டு விடுகிறான். ஆகையால் உன் மனதை யோகத்தில் செலுத்து. ஒரு வேலையை நேர்மையாகச் செய்தலே யோகமாகும். மேதாவிகள் புத்தியை ஒருமுகப்படுத்தினவர்களாய், செய்கையினால் உண்டாகும் பயனைத்துறந்து பிறவித்தளைகளைத் தொலைத்து துன்பமற்ற பதவியை அடைகிறார்கள். இந்த மோகச் சிக்கை உன் புத்தி எப்பொழுது கடந்து விடுகிறதோ அப்பொழுது தான் கல்விகேள்விகளால் நீ பெற்ற பொருள்களிலும் பெறப்போகிற பொருள்களிலும் உனக்கு வைராக்கியம் பிறக்கும். நீ கேட்டுள்ளவைகளால்பூர்ணதெளிவடைந்து உன் புத்தியானது எப்பொழுது சஞ்சலமற்று ஒரே விதமாய் ஒன்றுபட்ட மனதில் நிற்குமோ அப்பொழுது தான் நீ யோகஸித்தி பெறுவாய்.

இப்படி அடியிலிருந்து ஆரம்பித்து ஸ்ரீ கிருஷ்ணன் படிப்படியாக ஆத்மாவுக்கும் தேகத்துக்கும் உள்ள வித்தியாஸத்தை எடுத்துக்காட்டவே அர்ச்சுனன் சற்று புத்திமயக்கம் நீங்கினான். ஆத்மா வேறு தேகம்வேறு என்பது அர்ச்சுனனுக்குத்தெரியாத விஷயமன்று. இருந்தாலும் இந்த ஞாபகம் சமயத்தில் உதவவில்லை. அறிவுக்குப் புலப்படும் அனேக விஷயங்கள் யுகஸந்தி காலத்தில் செய்கையில் வருவதில்லை. பொருள்களின் குண

குணங்களைக் குறித்து வாதாடுவதில் மிகத்தேர்ந்தவர்களுக்குக் குறைவிராது. ஒவ்வொன்றிலும் புதைந்துகிடக்கும் நுட்பங்களை எல்லாம் வெகு சாதுர்யமாக இவர்கள் எடுத்துக் காட்டுவார்கள். ஆனால் எவ்வளவு திறமை யுடையவர்களானாலும் சமயத்தில் அவர்கள் திறமைப்பயன்படுவதில்லை. தர்மத்தை சாதாரண தர்ம மென்றும் விசேஷ தர்மமென்றும் பிரித்து விடுவார்கள். சாதாரண தர்மத்தை எப்பொழுது அனுசரிக்கவேண்டியது விசேஷ தர்மத்தை எப்பொழுது அனுசரிக்கவேண்டியது என்னும் விஷயத்தில் புத்தி மயங்கி விடுகிறார்கள். விசேஷ காலங்களில்கூட வெகுசாய் சாதாரண தர்மத்தையே தழுவி நிற்கிறார்கள். ஆகையால் தான் அர்ச்சுனன் எவ்வளவு சாஸ்திர ஞான முள்ளவனாக இருந்தாலும் சமயத்தில் புத்தி மயங்கி விடுகின்றான். சகல அஸ்திரங்களிலும் வல்லவனான கர்ணனுக்குப் பரசுராமர்கொடுத்த கொடிய சாபத்தால் அவனுடைய அஸ்திர வித்தை அவசியமான காலத்தில் பயன்படாது போகவில்லையா? நல்ல சமயத்தில் பயன்படாத வித்தையினால் என்ன பிரயோஜனம்? யுகப்பிரளயத்தின் வேகத்தால் இப்பரசுராமசாபம் மகா பாரத யுத்தத்தில் ஸ்ரீ கிருஷ்ணனைத் தவிர மற்றவர்களை யெல்லாம் கவர்ந்துவிட்டது. எல்லாரும் மகா புத்திசாலிகள் விஷயங்களை நன்கு அறிந்தவர்கள். சாதாரண காலங்களில் இவர்களுடைய புத்தி சாதுர்யம் உலகத்திற்கு வெகு பயன்படக்கூடியது. ஆனால் இப்பெருத்த யுக ஸந்தியில் கர்ணனுடைய அஸ்திர வித்தையைப் போலே இவர்களுடைய புத்தி கூர்மையெல்லாம் விழலுக்கு இறைத்த நீராகி விட்டது. அர்ச்சுனனுக்குத் தன்னுடைய பாணங்களால் பீஷ்ம துரோணர்களின் ஆத்மா கொல்லப்படுவதில்லை யென்பது உள்ளங்கை நெல்லிக்கனியைப் போலத்தெரியும். ஆத்ம அநாத்ம விவேகம் அவனிடத்தில் சிறிதும் குறைந்திருக்கவில்லை யானாலும் அது அவனுக்கு இப்பொழுது பயன்படவில்லை. உயர்ந்த தத்துவங்களைத் தெரிந்திருந்த போதிலும் ரணக்களத்தில் வில்லும் கையுமாக நிற்கும்பொழுது அர்ச்சுன

னுக்கு ஆத்மா வேறு தேகம் வேறு என்பது ஞாபகத்திற்கு வரக் காரணமில்லை. அப்படிக்கு ஒருவேளை அது ஞாபகத்திற்கு வந்தாலும் சாதாரண யுத்த தர்மத்தில் அதற்கு இடமே இல்லையாகையால் அது தன்னிலேயே மறைந்துபோய்விடும். இவ்விடத்தில் அர்ச்சுனன் தன் பந்துக்களுக்காக இரக்கப்படுவது அவர்கள் ஆத்மாவைப் பொருட்டல்ல; அவர்களுக்கும் தனக்குமுள்ள தேக சம்மந்தத்தைக் குறித்துத் தான். ஆகையால் அவன் எண்ணினது, "ஆத்மா இறப்பதில்லையென்பது உண்மையே, ஆனால் பீஷ்ம துரோணாதிகள் எனக்கு வேண்டியவர்களாயிற்றே, அவர்களை நான் கொல்வதினால் துக்கம் என்னையல்லவோ சார்கிறது! எனக்குள் ஏதேதோ சிலபுதிய தர்மங்கள் உதிக்கின்றன. அவைகளுக்காகப் புரியும் யுத்தம் ஒரு தர்மயுத்தம் என்பதில் சந்தேகமில்லை, நான் க்ஷத்திரியனாகையால் இதில் போர் புரிய வேண்டியதும் நியாயமே, இருந்தாலும் சாதாரண தர்மத்திற்கு இது எவ்வளவு நேர் விரோதமாய் இருக்கிறது! என்னுள் உதித்திருக்கும் சில புதிய உணர்ச்சிகளுக்காக நெருங்கிய பந்துக்களையா கொல்வது?" இப்படித் தனக்குள்ளேயே அர்ச்சுனன் தர்க்கிக்கலானான். விஷயங்களுக்குள் இருக்கும் தாரதமியம் அவனுக்கு விளங்கவில்லை. அவனுக்கு ஆத்ம உணர்ச்சியைக் காட்டிலும் வெளிப்படையான தேக சம்பந்தம் பெரிதாகத் தோன்றி விட்டது. ஆகையால் தான் "வில்லற்ற என்னை வில்லாளர்களான திருதிராஷ்டிரர்கள் கொல்லட்டும்" என்று சொல்லித் தன் பெருந்தகைமையைக் காட்ட எண்ணினான். இப்பெரும் பாரதப்போர் இரு திறத்தாருடைய பெருமை சிறுமைகளை விளக்க வந்ததன்று என்றறிந்த ஸ்ரீ கிருஷ்ணன் "சுக துக்கம், லாபாலாபம், ஜயாபஜயம், மானாபமானம், மித்திர ரிபுக்கள்" முதலிய எதையும் கருதாமல் போர் செய் என்று அர்ச்சுனனைத் தூண்டுகிறான். மேலும் அவன் காலப்போக்கின் வலிமையை அறிந்தவனாகையால் ஆத்மா அழியாதது, தேகம் அழிவுள்ளது, பிறந்தவை இறந்தே தீரும், இளமையிலிருந்து

மூப்பு உண்டாவது போலத்தான் மூப்பிலிருந்து மரணம் பலிதமாகிறது, பொருளல்லாததிலிருந்து பொருள் உண்டாவதில்லை, பொருள் எதுவும் அடியோடு அற்றுப்போவதில்லை, மாறிமாறிப் பரிணமிப்பது தான் அதன் சுபாவம் என்னும் சாங்கிய உண்மைகளாகிய வெகு சாதாரணமான ஞானத்தை அவன் அர்ச்சுனனுக்கு எடுத்துக் காட்டினான். அதோடு யோக விஷயமாகப்பேசி மனதை ஒருமுகப் படுத்தாது வேத வாக்கியங்களைக் கொண்டு பொருளற்ற வாதங்கள் செய்வதால் பயனில்லை யென்றும் தன் செயலால் விளையும் பயன் தனக்கு அனுகூலமாக இருந்தாலும் இல்லாவிட்டாலும் விடா முயற்சியோடு மனம் குலையாது அச் செயலை முடிப்பதுதான் ஆத்ம சக்தியை வளர்ப்பதாகும் என்றும் அது தான் மனிதனுக்கு வெகு முக்கியமானதென்றும் ஸ்ரீ கிருஷ்ணன் சொல்லி முடித்தான்.

வியவகார விஷயத்தில் கூட ஸ்ரீ கிருஷ்ணன் வேதாந்தத்தைக் கொண்டுவந்து விடுகிறானே என்று அர்ச்சுனன் சற்று வியப்புற்றானாலும் ஸ்ரீ கிருஷ்ணன் இதுவரை எடுத்துக் காட்டின காரணங்களால் தான் பெரிதாக எண்ணியிருந்த சாதாரண தர்மங்கள் அவ்வளவு பெரிதானவைக ளல்லவென்று தெரிந்துகொண்டு, "ஞானத்தில் ஊன்றி நிற்பவன் சொரூபம் என்ன? அவன் தன்னுடைய நிலைபெற்ற அறிவுடன் கூடி பேச்சிலும் இருக்கையிலும் நடவடிக்கையிலும் என்ன என்ன செய்கிறான்?" என்று கேட்டான்.

ஸ்ரீ கிருஷ்ணன் சொல்லுகிறான்: "பார்த்தா, மனதில் பாய்ந்து கிடக்கும் காமங்களையெல்லாம் துலைத்துவிட்டு தன் ஆத்மாவிலேயே சந்தோஷத்தை அனுபவித்துக்கொண்டு எப்பொழுது ஒருவன் இருக்கிறானோ அப்பொழுது அவன் 'ஸ்திதப்ரக்ஞன்' அதாவது ஞானநிலையில் ஊன்றி நிற்பவன் என்று சொல்லப்படுகிறான். துக்கம் வந்தபோது மனம் துடிதுடிக்காமலும் சுகம் நேர்ந்தபோது அதில் பற்றில்லாமலும் அவாவற்று, பயமற்று, கோபமற்று, ஸ்திரபுத்தியுள்ளவன் முனி என்று

சொல்லப்படுகிறான். எல்லா விஷயங்களிலும் உதாஸீனனாய்த் தனக்கு நேர்ந்தவைகளிலுள்ள சுபங்களையும் அசுபங்களையும் ஏற்றுக்கொண்டு அவைகளின் பயனாகிய உகப்பையும் பகையையும் எவன் கொள்ளுகிறதில்லையோ அவனுடைய பிரக்ஞை நிலைபெற்றுள்ளது. ஆமை தன் அங்கங்களை முற்றிலும் உள்ளே இழுத்துக் கொள்வதுபோல எவன் தன் இந்திரியங்களை அவைகள் நாடும் விஷயங்களிலிருந்து இழுத்துக்கொள்கிறானோ அவனுடைய பிரக்ஞை நிலைபெற்றுள்ளது. போக்கிய விஷயங்களை சுவைகளை அனுபவிக்காதவனிடத்திலிருந்து திரும்பிவிட்டாலும் அவைகளின் சுவை மாத்திரம் தங்குகிறது. அச்சுவையும் பரம்பொருளைக் காணும்போது அற்றுப்போய் விடுகிறது. விவேகம் நிறைந்த ஞானி ஒருவன் முயன்று வரும்போது கூட அவனுடைய வீறுகொண்ட இந்திரியங்கள் அவன் மனதைப் பலவந்தமாகக் கவர்ந்து விடுகின்றன. அவைகளை யெல்லாம் வழிப்படுத்தி ஒருமுகமாய் மனதை என்னிடத்தில்வைத்து இந்திரியங்களை எவன் வசப்படுத்தி வைக்கிறானோ அவனுடைய பிரக்ஞை நிலைபெற்றுள்ளது. விஷயங்களை நினைத்துக் கொண்டே இருக்கும் புருஷனுக்கு அவைகளில் பற்றுண்டாகிறது; அப்பற்றிலிருந்து காமம் உற்பத்தியாகிறது; காமத்தினால் கோபமும், கோபத்தினால் மனக்குழப்பமும், அதிலிருந்து புத்தியழிவும் முறையே உண்டாகின்றன. கடைசியாக புத்தியழிவினால் அவன் நாசமடைகிறான். எவன் ராக த்வேஷங்களை விட்டு விட்டு மனதை அடக்கி தன் வசப்பட்ட இந்திரியங்களைக்கொண்டு விஷயங்களில் சஞ்சரிக்கிறானோ அவன் மாசற்ற தன்மையை அடைகிறான். மாசற்ற தன்மையை அடைந்த உடனே அவனுடைய துக்கங்கள் எல்லாம் நாசமடைகின்றன. அவன்மனதில தெளிவு உண்டான உடனே அவனுடைய புத்தி நன்றாக நிலைபெற்றுவிடுகிறது.

மனோ விருத்திகளை வழிப்படுத்தாதவனுக்கு புத்தி என்பதும் இல்லை, தியானம் என்பதும் இல்லை, தியானமில்லாதவ

னுக்கு சாந்தி கிடையாது, சாந்தி இல்லாதவனுக்கு சுகம் எங்கிருந்து வரும்? அலையும் சுபாவத்தை உடைய இந்திரியங்களை எந்த மனது பின்செல்லுகிறதோ அது அந்த புருஷனுடைய பிரக்ஞையை ஜலத்தில் மிதக்கும் கப்பலைக் காற்று அபகரிப்பதுபோல அபகரித்து விடுகிறது. ஆகையால் எவனுடைய இந்திரியங்கள் விஷயங்களிலிருந்து முழுதும் விடுவிக்கப் படுகின்றனவோ அவனுடைய பிரக்ஞை நிலை பெற்றுள்ளது. எல்லா ஜந்துக்களுக்கும் எது இரவோ அதில் ஸம்யமி (மனதை வழிப்படுத்தியவன்) விழித்துக்கொண்டிருக்கிறான். எதில் ஜந்துக்கள் விழித்துக்கொண்டிருக்கின்றனவோ அது உண்மையைக்கண்ட முனிக்கு இரவாகிறது.

நிறைந்து அசைவற்றுக் கிடக்கும் சமுத்திரத்தில் ஜலங்கள் பிரவேசிப்பதைப்போல காமங்கள் எல்லாம் எவனிடத்தில் பிரவேசிக்கின்றனவோ அவன் சாந்தியடைகிறான். காமத்தில் பற்றுள்ளவன் அதை அடைவதில்லை. எல்லாக்காமங்களையும் விட்டுவிட்டுப்பற்றற்றவனாய் அகங்கார மமகாரங்கள் இல்லாதவனாய் எவன் சஞ்சரிக்கிறானோ அவன் சாந்தியை அடைகிறான். இது தான் பிரம்மத் தன்மையின் ஸ்திதி. இதை அடைந்த பிறகு ஒருவனும் மதிமயங்குவதில்லை. கடைசிகாலத்தில் மாத்திரமாவது ஒருவன் இந் நிலைமையில் இருப்பானேயாகில் அதனாலேயே அவன் பிரம்ம சாந்தியை அடைகிறான்.



# அத்தியாயம் ௩.

ஸ்ரீ கிருஷ்ணன் சொல்லியதை வெகு கவனத்துடன் அர்ச்சுனன் கேட்டுக்கொண்டிருந்தான். ஆனாலும் அது அவன் புத்திக்குத் தெளிவாக விளங்கவில்லை. "தனக்கு ஒன்று தேவை என்பதில்லாமலும், தனக்கு ஒன்றில் பற்றில்லாமலும் எவன் வாழ்கிறானோ அவன் பிரம்ம நிலைமை அடைகிறான் என்று கிருஷ்ணன் சொல்லுகிறான். ஆனால் இப்பொழுது இந்த கொடிய போரைச் செய்யும்படி தூண்டுகிறான். இது என்ன விபரீதமாயிருக்கிறதே? எனக்கு ராஜ்யத்தில் ஆசை கூடாது என்பது நியாயமே, ஏனெனில் ராஜ்யலோபம் அல்லவோ இக் கொடிய போருக்குக் காரணம்? நம்மைச் சுற்றியுள்ள விஷயங் களிலாவது நம்சுற்றத்தாரிடத்திலாவது பற்று கூடாது என்பதும் நியாயமே. தமக்காக வேண்டாவிட்டாலும் தம் சுற்றத்தார் பொருட்டாகவாவது இப்போர் போன்ற கொடிய செயல்களில் பிரவேசிக்க வேண்டி வருகிறதல்லவா? தேவையற்று பற்றற்று இருக்கவேண்டியது என்பதின் அர்த்தம் எனக்கு வெகு நன்றாக விளங்குகிறது. தேவை, பற்று இவைகள் இல்லாமல் இருப்ப தற்கு ஒரு செயலிலும் பிரவேசியாமல் இருப்பதல்லவோ முக் கியமாகும். அதைவிட்டு ஒரு காரியம் செய்யப்போவோமானால் அதற்கு அனேக விக்னங்கள் ஏற்படலாம், அனேக உதவிகளும் ஏற்படலாம். அந்த கார்யத்திற்கு உதவி செய்பவர்களிடத்தில் விருப்பும் தடை செய்பவர்களிடத்தில் வெறுப்பும் நமக்கு உண்டாகின்றன. அவ்விருப்பும் வெறுப்பும் எவ்வளவு கொடியவை என்பதற்கு இப்பெரும்போரே தக்க சான்றாகும். ஆகையால் விருப்பும் வெறுப்பும் இல்லாமல் இருக்க வேண்டு மானால் செயலற்று இருக்கவேண்டும். இப்படியிருக்க, கிருஷ் ணன் என்னை ஏன் கொடிய யுத்தம் செய்யும்படி ஏவுகிறான்?" என்று தனக்குள்ளே அர்ச்சுனன் ஆலோசித்துக்கொண்டு ஸ்ரீ கிருஷ்ணனைக் கேட்கிறான்: "ஜனார்த்தனனே, செயல்களை விட ஆத்ம நிலைமை மேலானதென்பது உன் கருத்தானால் என்னை ஏன் இக்கொடிய செயலைச் செய்யும்படி ஏவுகிறாய்?

மனக்கலக்கம் உண்டாக்கும் பேச்சுகளால் என் புத்தியை மயங்கச்செய்கிறாயே. இவைகளுக்குள் ஒன்றைத்தீர நிச்சயித்து நான் மேன்மை யடையும் வழியைச்சொல்லு,'' என்றான்.

— அர்ச்சுனா, உலகத்திலுள்ள இரு வழிகளை உனக்கு முன்னே சொல்லி யிருக்கிறேன்: ஸாங்கியர்களுடைய ஞான யோக மார்க்கமொன்று, யோகிகளுடைய கர்மயோக மார்க்க மொன்று. . ஒரு செயலைச் செய்யாமல் சும்மா இருப்பதினால் மாத்திரம் செயலின்மையை ஒருவன் அடைகிறதில்லை. செயலைத் துறந்துவிட்ட காரணத்தாலேயே எவனும் ஸித்தி பெறுகிறதில்லை. ஏனெனில் ஒரு நொடிப்பொழுது கூட எவனாலும் செயலற்று நிற்பது கஷ்டம், எல்லோரும் தமக்குச் சுபாவத்திலேயே பிறந்துள்ள குணங்களால் பரவசப்பட்டுச் செயல்களைப் புரிகிறார்கள். ஒருவன் தன் கர்மேந்திரியங்களை அடக்கிவிட்டு மனதினால் இந்திரிய விஷயங்களை எண்ணிக்கொண்டிருப்பானேயாகில் அவன் பொய்யாசாரங்களை உடையவன் என்று சொல்லப்படுகிறான். எவனொருவன் மனதைக்கொண்டு இந்திரியங்களை அடக்கிவிட்டு கர்மேந்திரியங்களால் கர்மயோகத்தைப் பற்றில்லாமல் செய்ய ஆரம்பிக்கிறானோ அவன்தான் சிரேஷ்டன். செயலற்றிருப்பதைக் காட்டிலும் செயலுடைமை மேன்மைபட்டதே. ஆகையால் நியதமாயுள்ள செய்கைகளை நீ செய். கார்யம் எதையும் செய்யாதிருந்தால் உன் சரீரத்தை போஷிப்பது கூட நடைபெறாது.

யக்ஞமாகச் செய்யும் கருமங்களைத்தவிர மற்றவைகள் எல்லாம் இவ்வுலகத்தில் மனிதனைக் கட்டுப்படுத்துகின்றன. கௌந்தேயனே, நீயும் பற்றில்லாதவனாகி கார்யங்களை அந்த யக்ஞத்தின் பொருட்டாகச் செவ்வையாய்ச் செய். பூர்வத்தில் பிரஜாபதியானவர் பிரஜைகளை யக்ஞத்தோடு ஸ்ருஷ்டித்து விட்டு அவர்களுக்குச்சொல்லியது: "இதைக்கொண்டு நீங்கள் விருத்தியடையுங்கள். இது உங்களுக்கு இஷ்டபோகங்களைக் கொடுக்-

கக்கடவது. இதைக்கொண்டு தேவதைகளைப் போஷியுங்கள், அந்த தேவதைகளும் உங்களைப் போஷிக்கட்டும். இப்படி ஒருவரை யொருவர் பாராட்டிக்கொண்டு மேன்மை யடையக்கடவீர்கள். யக்ஞத்தால் போஷிக்கப்பட்ட தேவர்கள் உங்களுக்கு இஷ்ட போகங்களைக் கொடுப்பார்கள். அவர்களால் கொடுக்கப்பட்டவைகளை அவர்களுக்குத் திருப்பிக் கொடுக்காமல் எவன் அனுபவிக்கிருனே அவன் திருடன் ஆகிருன்." யக்ஞமாகச்செய்யும் கார்யத்தினுல் உண்டாகும் பயனை அனுபவித்து வரும் ஸத் புருஷர்கள் ஸர்வ பாபங்களிலிருந்தும் விடுபடுகிருர்கள். எவர்கள் தம் பொருட்டாகவே சமயல் செய்துகொள்ளுகிருர்களோ அந்த பாபிகள் பாபத்தையே புஜிக்கிருர்கள்.

உயிருள்ளவைகள் உணவுப்பொருள்களினுல் உண்டாகின்றன. உணவுப் பொருள்கள் மழையினுல் கிடைக்கின்றன. யக்யமே சுபாவமாயுள்ள பிரகிருதிதேவி அந்த யக்ஞங்களைக் கண்டு மழை பொழிகிருள். யக்ஞங்கள் மனிதர்களின் செயல்களால் உண்டாகின்றன. மனிதச் செயல்கள் பிரும்மாவினிடத்திலிருந்து உண்டாகின்றன. அந்த பிரம்மா என்றும் அழிவில்லாத கடவுளிடத்தி லிருந்து உண்டாகிருன். ஆகையால் எங்கும் பரவியுள்ள அக்கடவுள் இடைவிடாது யக்ஞத்தில் நிலைபெற்று நிற்கிறது. இப்படி ஒன்றை யொன்று தொடர்ந்து வரும் இச் சக்கரத்தை இவ் வுலகத்தில் எவன் பின்பற்றுகிறதில்லையோ அவன் பாபம் நிறைந்த வாழ்க்கை யுடையவனுகி, இந்திரிய விஷயங்களிலேயே உகப்படைந்து கொண்டு வீணில் நாட்களைக் கழிக்கிருன்.

எந்த மனிதன் தன் ஆத்மாவினிடத்தில் பிரிய முள்ளவனுய் அதிலேயே திருப்திகொண்டு சந்தோஷத்தையும் அதில் அடைகிருனே அவனுக்கு வெளியில் செய்யவேண்டிய கார்யம் எதுவும் இல்லை. அவன் ஒரு செயலைச் செய்வதனுலாவது விடுவதனுலாவது அவனுக்குப் பயன் ஒன்றும் கிட்டப் போகிற

தில்லை. அன்னியரை ஆசிரயித்து அவன் பெறவேண்டியது ஒன்றுமில்லை. ஆகையால் பற்றற்றவனாய் இருந்துகொண்டு நீ செய்யவேண்டிய கார்யங்களை இடைவிடாது நன்றாகச்செய்; ஏனெனில் ஒரு புருஷன் பற்றில்லாமல் கார்யங்களைச் செய்வதனால் பரமான நிலைமையை அடைகிறான். ஜனகர் முதலானவர்கள் கூட கார்யங்களைச் செய்துதான் நல்ல ஸித்தி பெற்றார்கள்.

பொது ஜனங்களுடைய நன்மையைக் கருதியாவது நீ கார்யம் செய்யக் கடவாய். பெரியவன் ஒருவன் எந்த கார்யத்தைச் செய்கிறானோ அதையே மற்ற ஜனங்களும் செய்கிறார்கள். அவன் இடும் வரம்பையே உலகத்தார் தழுவிச்செல்லுகிறார்கள். இதோ பார், பார்த்தா, எனக்கு இம் மூவலகங்களிலும் செய்ய வேண்டியது ஒன்றுமில்லை, அடைய விரும்பும் பொருள்களில் எதையும் நான் அடையாமல் இல்லை, இருந்தாலும் நான் கார்யம் செய்து கொண்டேதான் இருக்கிறேன். இடைவிடாது சோர் வில்லாமல் நான் உழைக்கா விட்டால் எங்கும் என் வழியையே மனிதர்கள் பின்பற்றுவார்கள். நான் வேலை செய்யாமல் இருப்பேனேயாகில் இவ்வுலகத்தார் நாசமடைவார்கள்; நானும் உலகத்தில் கலக்கத்தை ஏற்படுத்தினவனாகவும் இந்த ஜனங்களைக் கொன்றவனாகவும் ஆவேன்.

அறிவில்லாதவர்கள் பயனையே கருதி எப்படி காரியங்களைச் செய்கிறார்களோ அப்படியே பயனைக் கருதாது உலக நன்மைக்காக அறிவுடையவர்கள் தொழில் புரியவேண்டும் தொழிற் பயனில் விருப்பமுள்ள அக்ஞர்களின் மனதைக் கெடுக்கக் கூடாது. புத்திமான் தன் மனதை ஒருமுகப்படுத்திக் கொண்டு எல்லாத் தொழிலையும் நன்றாகப்புரிந்து காட்டி அவைகளில் அவர்களுக்கு பிரீதி உண்டாக்கவேண்டும். பிரகிருதியினால் ஏற்பட்ட குணங்களினாலேயே எங்கும் கருமங்கள் நிகழ, அகங்காரத்தால் புத்தி மயங்கின மூடன் ஒருவன், "இவைகளைச் செய்தவன் நான்," என்று எண்ணுகிறான். குணம் கருமம்

இவைகளுள் இருக்கும் வேற்றுமைகளை உண்மையில் அறிந்த ஞானி, "குணங்கள் தம்மில் தாமே பிரவர்த்திக்கின்றன," என்று தெரிந்துகொண்டு பற்றற்று இருக்கிறான். தமக்குள்ள சுபாவ குணங்களில் முழுகி மூடராயிருப்பவர்கள் பயனுக்காக ஆசைப் பட்டுச் செய்யும் கருமங்களில் பற்றுடையவர்களா யிருக்கிறார் கள். பூர்ண ஞானமில்லாத மந்த புத்திகளான அவர்களை முற் றும் அறிந்த ஒருவன் கலைக்கக் கூடாது.

அத்யாத்ம புத்தியால் உன் செய்கைகளை யெல்லாம் எனக்கு அர்ப்பணம் செய்துவிட்டு ஆசையற்று மமதை இல்லா மல் சோகப்படாமல் யுத்தம் செய் என்னுடைய இந்த ஸித்தாந் தத்தை ஊக்கத்தோடும் தீங்கு நினையாமலும் எந்த மனிதர்கள் இடைவிடாது கைப்பற்றி வருகிறார்களோ அவர்களும் கூட கர்ம பந்தத்திலிருந்து விடுபடுகிறார்கள். எவர்கள் தீய எண் ணங்களால் என் ஸித்தாந்தத்தைப் பின்பற்றுவதில்லையோ, அவர் கள் ஞான விஷயங்களிலெல்லாம் மூடர்களாய் புத்தியற்று நாசமடைவார்கள் என்பதை நீ தெரிந்து கொள். ஞானவான் கூட தன் சுபாவத்திற்கு ஒத்தே நடக்கிறான். ஸர்வ பூதங்களும் பிரகிருதியைத் தழுவியே செல்லுகின்றன: இப்படி யிருக்க வீண் எதிர்ப்பினால் என்ன செய்யமுடியும்? விஷயங்களுக் குரிய விருப்பும் வெறுப்பும் தாமாகவே இந்திரியங்களில் நிலை பெற்றிருக்கின்றன; ஆனால் நாம் அவைகளின் வசப்பட்டு விட லாகாது; ஏனெனில் அவைகள் நம்முடைய நற்கதிக்குப் பெருந் தடைகள். ஒருவனுக்கு அன்னியனுடைய தருமத்தை விட தன் தருமம் தாழ்ந்ததானாலும் அதுவே மேலானது. தன் தருமத்தி லிருந்துகொண்டு பிராணனை விடுவது உத்தமம், ஏனெனில் அன்னியன் தருமம் தனக்குப் பெருத்த அச்சத்தை விளை விக்கும்.

இப்படிக்கு ஸ்ரீ கிருஷ்ணன் கர்மயோக வழியை படிப் படியாக விளக்கியதைக்கண்டு அர்ச்சுனன் வியப்படைந்தான்.

செய்கை இந்த லோக ஸிருஷ்டியில் ஒரு முக்கிய கருவியாக அமைக்கப்பட்டிருக்கிறது அதை யக்ஞமாகக்கருதி ஒவ்வொருவனும் சரிவரச்செய்து முடிக்கவேண்டும் அது ஒரு ஸநாதன தருமம். உண்மையில் ஞானஸ்வரூபியாகிய ஆத்மாவுக்கு இவ்வுலகச் செய்கைகளினால் ஆகவேண்டிய தொன்றுமில்லாவிட்டாலும் இங்கு பிறந்த மாத்திரத்திலேயே அதற்குச் செய்கை இன்றியமையாததாக ஆகிவிடுகிறது. ஆகையால் உத்தம ஞானிகள் தமக்கு ஏற்பட்டுள்ள தொழிலை புனிதமான யக்ஞமாகக் கருதி அதனால் விளையும் பயனில் ஆசைவைக்காமல் — ஆனால் அதன் பயனையே முக்கியமாகக் கொண்டவர் போல — அதை வெகு சீராகச்செய்து பகவானுக்கு அர்ப்பணம் செய்துவிட வேண்டும். இதுதான் லோகசங்கிரகம் என்று அர்ச்சுனனுக்குப் புலப்படவே அவனுக்கு உலகமே ஒரு புதிய ஒளியோடு விளங்கிற்று. "அட, இது என்ன ஆச்சரியம், இவ்வுலகத்தில் மனிதன் ஸாதிக்க வேண்டிய தொன்றுமே இல்லை. அவனுக்குள்ளதெல்லாம் தனக்காக ஏற்பட்ட கருமத்தை சரிவர முடிப்பது ஒன்றுதானே! அப்படிச் செய்பவனுக்கு அக்கருமத்தால் உண்டாகும் பாப புண்ணியங்கள் அவனைப் பீடிப்பதில்லை அல்லவா! ஐயோ, நான் என்னமோசம் போயிருந்தேன்! இந்த யுத்தம் செய்வதனால் பெரிய தருமங்கள் அழிந்துபோம், அவைகளை அழித்ததனால் நியதமான நரகவாசம் தான் நமக்கு கதி என்று பயந்து கொண்டிருந்தேனே!" என்று அர்ச்சுனன் ஆலோசித்தான். "ஆனால் ஆண் மகன் ஒருவனுக்கு மானமும் ரோஷமும் சிறந்த அணிகளாயிற்றே! அதிலும் க்ஷத்திரியனுக்கு அவை இன்றியமையாதவை. அவன் சிறு வயதிலிருந்தே அவைகளை அருமையாக வளர்க்கிறான். அவன் ஒவ்வொரு செய்கையிலும் அவை பொங்கி வழிகின்றன. தனக்காவது தன் சுற்றத்தாருக்காவது தன் பக்ஷத்தாருக்காவது ஒரு சிறு மானக்குறைவு தன் வைரியிடத்திலிருந்து ஏற்பட்டு விட்டால் அவன் அதைக் கனவிலும் மறவான். வயிற்றிலேயே வைத்துக்கொண்டிருந்து

சமயம் வாய்க்கும்போது அதைப் பிரளயாக்கினியாக வெளியிடுவான். இப்பெரும்போர் அப்படித்தானே மூண்டுவிட்டது. சிறு மனஸ்தாபங்கள் நம்மையறியாமலே நம்முள் வேரூன்றிப் போய் இம்மகா யுத்தத்திற்கு காரணமாய் விட்டன. இப்பொழுது பந்துமித்திரர்கள் என்பதைக் கூடப் பாராட்டாமல் ஒருவரை யொருவர் வெட்டிமடியத் தயாராய் நிற்கிறோம்! இந்த மறத்தொழிலுக்கும் ஸ்ரீ கிருஷ்ணன் எடுத்துக்காட்டும் தெய்வீகத் தன்மைக்கும் எவ்வளவு தூரம்! இயற்கையாகவே மனிதன் இந்த தெய்வீகத் தன்மையை யல்லவோ நாடவேண்டும்! அவன் ஏன் தீய நெறியில் செல்லவேண்டும்? அவன் தன்னையும் மீறிப் பாவச்செயல்களைச் செய்கிறானே, அது ஏன்?" என்று தனக்குள்ளே பலவாறாக எண்ணி அர்ச்சுனன், "கிருஷ்ணா ஆனால் பாபம் செய்யும்படி மனிதனை தூண்டுவது யார்? அவன் இச்சியாமலிருக்கும் பொழுதுகூட அதில் பலாத்காரமாகத் தள்ளப் படுகிறானே?" என்று கேட்டான்.

— அப்படிச் செய்வது அவனுடைய காமம், அவனுடைய குரோதம். இது ரஜோகுணத்திலிருந்து உண்டாகிறது. இதைத் திருப்தி செய்யவே முடியாது, பெரிய பாவங்களுக்குக் காரணமானது. இது இவ்வுலகத்தில் ஒரு கொடிய சத்ரு என்று நீ தெரிந்துகொள். எப்படி நெருப்பு புகையினால் மூடப்படுகிறதோ முகம்பார்க்கும் கண்ணாடி அழுக்கினால் மறைக்கப் படுகிறதோ, எப்படி கருப்பத்தை உல்பப் பை சூழ்ந்திருக்கிறதோ அப்படியே இந்த உலகத்தை அது சூழ்ந்துகொண்டிருக்கிறது. ஞானிகளுக்கு நித்திய விரோதியாகிய அது ஆசாரூபமாய் இருந்துகொண்டு நெருப்பைப்போல என்றும் திருப்தியடையாமல் ஞானத்தை மறைத்து நிற்கிறது.

இதற்கு இருப்பிடம் இந்திரியங்கள், மனசு, புத்தி என்று சொல்லப்படும். இவைகளால் ஞானத்தை மறைத்துவிட்டு தேகத்திலிருக்கும் ஆத்மாவை அது மயங்கச்செய்கிறது. ஆகை

யால், பரதருஷபனே, நீ இந்திரியங்கள் முதலானவைகளை அடக்கி ஞானவிக்ஞானங்களை அழிக்கிறதும் பாபம் நிறைந்ததுமான இதை நாசம்செய். இந்திரியங்கள் மேலானவை என்கிறார்கள்; இந்திரியங்களைவிட மனது மேலானது; மனதைவிட புத்தி மேம்பட்டது; புத்தியைவிட பரமானதுதான் அது.* இப்படி புத்திக்கு பரமானதாக அதைத் தெரிந்துகொண்டு ஆத்மாவைத் தன்னிலேயே நிலைபெறச்செய்து ஆசாரூபமாகவும் ஜயிக்க முடியாததாகவும் இருக்கும் சத்ருவை நீ நாசம் செய்.



* ஸ்ரீ சங்கர பாஷ்யத்தில் அது என்பதற்கு ஆத்மா என்னும் பொருள் கொள்ளப்படுகிறது.

ஸ்ரீ ராமானுஜ பாஷ்யத்தில் அது என்பதற்கு காமம் என்னும் பொருள் கொள்ளப்படுகிறது.